உ

திருச்சிற்றம்பலம்.

கோடீசுவரமென்னும் பேருடைய

கொட்டையூர்.

சிவக்கொழுந்து தேசிகர்

பாடிய

# கோடீச்சுரக்கோவை.

இஃது

சென்னை, பச்சையப்பன் காலேஜ்

தமிழ்ப்பண்டிதர் ம-ள-ள-ஸ்ரீ

பி. கிருஷ்ணசாமிமுதலியார்

மாணாக்கர்

ஆ. சென்னகேசவுலுநாயுடு

அவர்களால் பார்வையிடப்பட்டு,




அவர்களாற்றமது

சென்னை ஸ்ரீமட்டுவார்குழலம்பாள்

அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப் பட்டது.

1889

இஃது,

சிவக்கொழுந்துதேசிகர் புதல்வராகிய

வடுகநாததேசிகர் பாடியது.



# சிறப்புப்பாயிரம்.

அருமறைபோற்றிடுபெரமாமகிழ்க் கோடீசசுரககோவையமிர்தவெள்ளத்

தொருதுறையிலிறங்கினாக ளதிறபடிநதன்னதன்சுவையாநகுண்டுதம்பா

வருதமிழ்ப்பாவலர்தமககுநகொடுத்தினிது பெருவகைமருவுவார்மேற் [ல

கருதுபலதுறையினுமிவ வாறேயாமபாாதகிடுமினக ற்றுளோமே





கணபதிதுணை.

# கோடீச்சுரக்கோவை.

காப்பு.

கோடீச்சுரனுதவுகோடிவிநாயகவிக்...........................*
கோடீச்சுரக்கோவைகூறுவிப்பாய்-நாடிவந்து ...............*
வஞ்சகமாதிமருவுமெளியேன்வலிய.............................*
நெஞ்சகத்தேநீயொருசார்நின்று....................................*

காட்சி.

சீர்கொண்டதாமரைப்போதைந்திரண்டுசெழுமுகைகல்
வேர்கொண்டநீலமிரண்டோர்குமுதமிவற்றொடுதெண்
ணீர்கொண்டவேணியர்கோடீச்சுரேசர்நெடுவரைமேற்
கார்கொண்டகாவினிடையிலொராவிநங்கண்ணுற்றதே. (௧)

இடையில்-நடுவில், இடையில்லாத. ஆவி-உயிர், தடாகம்.

ஐயம்.

பாரோவலாரியின்பாருலகோசுஞ்சப்பாவையண்ண
லூரோவிதிதன்பதியோமதியோடொளிரும்விண்ணிற
றேரோவதைசூழ்தருகோடீச்சுரத்தார்திண்சிலம்பி
னேரோர்வடிவெடுத்தன்னவின்றொளொடிவந்திடமே. (௨)

மதியோடொளிரும்விண்ணில்-மதியொடுவிளங்குமின்றவிண்போல்.

தெளிதல்.

கடியேறுகொன்றையர்கோடீச்சுரவெற்பிற்கண்டதெ
கொடியேயிதனடிக்கொண்டதுபூமுகங்கொண்டதுவேர்
முடியேறியவண்டுநோக்கியையுமன்முன்னுமிந்தப்
படியேயிதனிலையென்றுநெஞ்சேயிவைபன்னிடுமே. (௩)

பூ-நிலம்,மலர். வேர், வேர், வேர்வு. ஏறிய-ஏறின. படி-பூமி, தன்மை.

குறிப்பறிதல்.

பாலார்மொழிபங்கர்கோடீச்சுரவெற்பின்பாலுறுநா
மாலாயினுமந்தமால்சோர்ந்துமுன்பின்மகிழ்வுபெற

மேலாழிதன்னுள்விடத்தோடமிர்தம்விளைந்ததொக்கு
னூலாமிடையினள்வேல்விழித்தோன்றியநோக்கங்களே. (௪)

இரந்துபின்னிற்றற்கெண்ணல்.

கனமுந்துறுகண்டர்கோடீச்சுரவெற்பிற்கண்டிடுமின்
னினமுந்துவளிடையாளின்பநல்குநம்மின்னலெல்லா
மணமுந்துமாக்கின்மணமேவருதிவளருமிக்க
தனமுந்தயையுமுளளாரில்லையென்பாசொல்சார்ந்தவாகவே. (௫)

நல்கும-நல்குவள். மன-பொருள்.

இரந்துபின்னிலைநிற்றல்.

சேவாகொடியினாகோடீச்சுரேசாசிலம்பிலென்மெய்ப்
பூவாளிதைத்தபுண்ணின்கணின்கண்ணெனும்பூமருவு
மேவாவதனையுமேவிப்பராமுகமேவியிங்ஙன்
பாவாய்வண்பாவாய்நிலாபோலநிற்றல்பண்பாவுனக்கே. (௬)

முன்னிலையாக்கல்.

நாட்டங்கொள்பாலத்தர்கோடீச்சுரமன்னநன்னுதலாய்
கூட்டங்கொள்பாங்கியாதமமைவிட்டீண்டுக்குறுகிமதன்
வேட்டஞ்செயுமிடத்தேதனிநின்றதென்மேன்மையொடு
தோட்டங்கொள்காவலர்க்காவலுறமேற்றுவிதுசொல்லுகவே. (௭)

தோட்டங்கொள் காவலர்க்கு-இதழழகுடையசோலைமலருக்கு.

வண்டோச்சிமருங்கணைதல்.

வேழமுரித்தவர்கோடீச்சுரத்தாவெற்பிலிந்த
வேழையிடத்துப்பலகீதம்பாடியிளைத்திவடன்
கூழைவிரும்பியுறைவண்டுகாள்கணங்கொண்டுசென்று
சூழுமக்காவலர்நல்கமுதார்ந்துசுகம்பெறவே. (௮)

ஏழை-ஏழை,மடந்தை. கூழை கூழினை, கூந்தல்.
காவலர்-அரசர் சோலைமலர்.

இதுவும் வண்டோச்சிமருங்கணைதல்.

விடையுறுகேதனாகோடீச்சுரவெற்பின்மேவுமன்ன
நடையினருங்களையென்கண்ணெனமுன்னவின்றிடுதல்
புடையுறுநானறிவேன்வண்டர்நீவிரிப்போதிவட
னிடையைமுறிக்கத்தலைப்பட்டிருக்கின்றிரென்னிதுவே. (௯)

வண்டர்-வண்டுகள். தலைப்படல் சென்னியிற்பட்டிருத்தல், தொடங்கல்.

### மெய்தொட்டுப்பயிறல்.

செய்ப்பட்டசூலத்தர்கோடீச்சுரவெற்பினீடுசரத்
தைப்பட்டமாரனெய்தாலுமெய்தானரந்தையடையோங்
கைப்பட்டமாதனமாதனமீங்குரங்கைப்பட்டதான்
மெய்ப்பட்டிடுதனம்பெற்றார்க்கெவ்வின்பமுமேவுறுமே. (௰)

### பொய்பாராட்டல்.

மெய்யன்பருக்கருள்கோடீச்சுரநித்தர்வெற்பணங்கே
பொய்யன்றிவைநின்னிடைக்கிணையாமெனப்போந்துசிலர்
கையினடிபட்டரற்றுந்துடியதைக்கண்டுவெம்போர்
செய்யுங்கணைமதன்கண்மறைவாகித்திரிந்திடுமே. (௰௧)

### இடம்பெற்றுத்தழாஅல்.

படந்திகழ்பூண்புனைகோடீச்சுரவள்ளல்பைம்பொன்வெற்பின்
மடந்தைநற்பொன்னெனுநீயுந்தண்சோலைவளநிழலுந்
தடம்பெருமாரன்கணையுமிங்கேய்ந்திடச்சார்ந்தனன்யா
னிடம்பொருளேவலெல்லாமுளவெனக்கென்குறையே. (௰௨)

ஏவலர்-ஏவலாளர், அம்பாகியமலர்.

### இதுவு மிடம்பெற்றுத்தழாஅல்.

தக்கோர்புகழ்சண்பைக்கோடீச்சுரநம்பர்தம்மகனார்க்
கக்கோலக்காவிற்றம்பொற்றாளந்தாமீந்தடிமையினேற்
கிக்கோலக்காவிலுன்பொற்றாளீநல்கிடவரிகண்
மிக்கோதைசெய்குழன்மாதேயின்றுன்னைவிடுத்தனனே. (௰௩)

### வழிபாடுமறுத்தல்.

வலிவுறுசூற்படைக்கோடீச்சுரேசர்மணிவரைமேற்
பொலிவுறுதோழியர்பாங்கியராத்தனிப்போந்துநின்று
மெலிவுறுமென்றனைக்காத்தருள்சாந்தமிசைக்கொடுதண்
மலிவுறுபோதமுடனளிவாய்ந்துறைமாதவியே. (௰௪)

பாங்கியராக-பக்கத்திற்சென்றவராக. சாந்தம்-சந்தனமரம், பொறுமை.
போதம்-ஞானம், பூவழகு. அளி-கருணை, வண்டு.
மாதவி- குருக்கத்தி, தவத்தினள்.

### இடையூறுகிளத்தல்.

கொந்தார்மலர்ச்சடைக்கோடீச்சுரேசர்குவட்டில்வள
ரந்தாமரைத்திருவேநீயெனக்கெவ்வளவுதனந்

தந்தாலுமாங்கதொருபெரிதன்றுதரிலமையும்
பைந்தாட்குவளைநிகருன்விழியருட்பார்வையதே. (௰௫)

இருவுமிடையூறுகிளத்தல்.

துண்டமதிபுனைகோடீச்சுரேசர்சுடர்க்கிரிவாழ்
பண்டருநீஞ்சொன்மயிலனையாயிந்தப்பாரிடத்தே
தண்டரும்போதெங்கெனத்தேடிவண்டுகள்சார்தலுண்டு
வண்டிடந்தேடிநின்கைப்போதுசார்ந்ததுமாவியப்பே. (௰௬)

நீடுநினைந்திரங்கல்.

வில்லார்சலவிற்கோடீச்சுரேசர்தம்வெற்பினிந்த
நல்லாள்பதங்கைமுகம்வாய்தடங்கொணயனமிவை
யெல்லாமினியமலராகியற்றியிதையமொன்றுங்
கல்லாவகுத்ததென்னோவிதியாகியகைதவனே. (௰௭)

மறுத்தெதிர்கோடல்.

நடநவிலீசர்தென்கோடீச்சுரர்வெற்பினிறையாய
வடன்மதன் × றன்னிடமெய்ந்நிடப்பேரம்விழைவாவதனை
விடலருநாணன்கொண்டகத்தசைத்தாலுமெலச்செலுமாற்
கடல்புரமைமான்மற்றதனைத்தடுக்குங்கணையில்லையே. (௰அ)

× எய்ந்நிட-பொருந்திட,மெய்ந்நிட.விழைவாவதனை-ஆசை
யை,ஆசையாகிய பசுவை,நாண்-கயிறு,வெட்கம்.அகம்-மனம்.வீடு.

வறிதுநகைதோற்றல்.

சகமுழுதும்புகழ்கோடீச்சுரேசர்தடஞ்சிலம்பிற்
ககமுலவுந்தளிர்க்காவிடத்திம்மணிக்கட்கரும்பின்
முகமதிற்றோன்றியமுத்தநகைக்கயன்முத்தநகை
நிகரலநோன்றுரைத்தாற்பழிப்பாகிகழதற்கே. (௰௯)

முறுவற்குறிப்புணர்தல்.

வகைபூத்தசீருடைக்கோடீச்சுரசித்தர்மால்வரைப்பாற
றொகைபூத்தவேர்கொண்டளிகொண்டுநீடுசுகம்பயிலுந்
தகைபூத்தகாவில்வளரிம்முலைக்கொடிதன்னிடத்தோர்
நகைபூத்ததின்னதிலோர் மணந்தோன்றிடுநந்தமக்கே. (உ௰)

பூத்தவேர்-வேர்,ஏர்,அளி வண்டு,அன்பு.முலைக்கொடி-முலையுடையகொ
டி,முல்லைக்கொடி.நகை-அரும்பு,முறுவல்.மணம்-வாசம்,புணர்ச்சி.

முயங்குதலுறுத்தல்.

செல்வங்கிளரொழிற்கோடீச்சுரநம்பர்திண்சிலம்பின்
வில்லங்கெடுத்தெதிர்வேள்படைசூழ்வரமேவியிங்குச்
சொல்லங்கமுற்றணியாரின்னகாரிகைதுன்னுரங்கொள்
வல்லங்கைக்கொண்டனங்கூடல்பெற்றேமுண்மகிழ்வுறவே. (உக)

காரிகை-அழகு,பெண்.உரம்-மார்பு,வலி.வல்லம் - ஒருபட்டணம்,வல்-சூதாடுகருவி.கூடல்-மதுரை,புணர்வு.

புணர்ச்சியின்மகிழ்தல்.

மானேயிக்காவோர் தடநீகமலமலர்மலர்வண்
டேனேவளருநின்பேரின்பம் வந்துனைச்சேர்ந்ததுற்ற
நானேயத்தேனையுண்வண்டுகண்டாய்நன்னடிபுடனே
வானோர்மதியணிகோடீச்சுரசித்தர்மால்வரைக்கே. (உஉ)

புகழ்தல்.

வெளிதருநீற்றரன்கோடீச்சுரவண்ணல்வெற்பின்வளர்
குளிருமைக்கூந்தலுன்கண்ணோக்கிமீன் பயங்கொண்டலையு
மொளியுறுமின்னுன்னிடைநோக்கிவானிலொளித்திருக்குங்
களியுறுமன்னம்பறந்திடுநின்னடைகாண்பொழுதே. (உங)

எற்புறவணிதல்.

சொல்லணிநீடுபொருளணிமேற்பலசூழிவெற்றுப்
சில்லணியொன்றினென்றேய்ந்தவைவேறுதெரிந்துரைலை
வல்லணிமீதினுலாவுறுகோவைவனைந்திடுகே
னல்லணிகண்டத்தர்கோடீச்சுரமன்னவாரணங்கே. (உச)

அணிந்துழிநாணியது உணர்ந்துதெளிவித்தல்.

பணிபெறுபூணினர்கோடீச்சுரவெற்பின்பான்மணஞ்செய்
கணிபெறுசோலையின்மாதேயுலாவுன்றன்கண்ணிலங்கு
மணிபெறுநன்மையுறவீண்டெழுதினன்மன்னிமுன்போ
லணிபெறவோதிமுடித்தேனிதிலொன்றுமையமின்றே. (உரு)

பெருநயப்புரைத்தல்.

பங்கமுறுதிருபோதுமலர்ந்துபனியினொடு
திங்கட்கெய்யாதுமுண்மேல்வதியாதுதிலகமுற்றிம்
மங்கையெழின்முகம்போலோர்நளினமலர்வண்டுகொ
ளெங்குளதோதுமின் கோடீச்சுரோசரிமயத்திலே. (உசா)

தெய்வத்திறம்பேசல்.

மேருமுடியிருப்போருமதனடிமேவினரு
நேருறநோக்கிமகிழ்ந்திடவே லன்னநீள்விழியாய்
வாருறுவேணியர்கோடீச்சுரேசர்வளைத்ததெனச்
சேருமச்செய்ததுநம்மைமூன்றூழின்றிறமதுவே. (உஎ)

பிரியேனென்றல்.

மறியாரிடத்தினர்கோடீச்சுரேசர்மலரடிசெந்
நெறியாலடைந்தவர்நீங்குவரோதுடிநேரிடையாய்
வறியார்மனைப்பொன்மழைபோன்மருவுனைவைத்தகலற்
கறியாதவனலனின்னினும் வேறென்னரும்பொருளே. (உஅ)

பிரிந்துவருகென்றல்.

தூவென்றகுலத்தர்கோடீச்சுரவெற்பிற்குழைனோநீ
போவென்றுரைக்கினும்போகேனொடிவரைப்போதுசெலற்
கேவென்றகண்ணியுளதொன்றிரோனக்கிருந்திடினும்
வாவென்றுகைக்கொடுவந்திடுமீங்கென்மனம்விரைந்தே. (உகூ)

இடமணித்தென்றல்.

சங்கரரங்கணர்கோடீச்சுரமன்னதாழ்குழலா
யுங்கள்புனத்திலுலாவுங்கிளிகளுமொண்மயிலு
மெங்கணகர்ப்பளிங்கார்சுவர்த்தோன்றலையென்றுமதிற்
றங்குறுஞ்சித்திரசித்திரமீதெனச்சாற்றுவரோ. (௩0)

தெளிவு.

சிங்கத்துரிபுனைகோடீச்சுரசித்தர்தென்மதுரை
தங்கத்தமிழ்ச்சங்கத்தார் சொற்றவறிஞுஞ்சார்ந்துநந்தஞ்
சங்கத்திருந்துதமிழாய்ந்தவர்சொற்றவறுவரோ
விங்கிற்றையேவருவார்மனமேதெளிவின்னதுவே. (௩௧)

சங்கம்-புணர்ச்சி. தமிழாய்ந்தவர்-இன்பமுணர்ந்தவர்.

செல்லுங்கிழத்திசெலவுகண்டுளத்தொடுசொல்லல்.

மின்வார்சடையினர்கோடீச்சுரநம்பர்வெற்பின்மதன்
றன்வார்சிலையுமிரதியின்சாபமுந்தம்முடியுங்
கொன்வார்கணைகளும்வெம்போரதனிடைக்கொண்டுனையும்
பின்வாவென்றேகிடல்பார்மனமேயொருபெண்ணரசே. (௩௨)

பாகனொடுசொல்லல்.

வின்மதன்றன்னைவெல்கோடீச்சுரம்பர்வெற்பிடத்துத்
தன்மனமென்கண்ணைவைத்தென்மனந்தான்கொண்டுதங்கித்தங்கி
முன்மதிகாணீர்த்திடப்பின்பயந்தள்ளமுத்தநகை
மென்மருங்கோர்மின்செலல்பார்வலவவியன்பொழிற்கே. (௩௩)

ஆயவெள்ளம்வழிபடக்கண்டிதுமாயமோவென்றல்.

அண்டர்தம்மாதர்நடுவிந்திராணியிறையத்துறூஉம்
வண்டிருமாதிவட்கோடீச்சுரத்தர்மால்வரையிற்
கண்டிருப்போமங்கொருகாற்புணரக்கருத்தினிச்சை
கொண்டிருப்போமன்றிக்கூடியிரோமுன்குறித்திடினே. (௩௪)

வாயில்பெற்றுய்தல்.

நஞ்சிற்பொலிகண்டர்கோடீச்சுரவெற்பினண்ணுமித்த
வஞ்சிக்கொடிதன்மலர்முகமேவியவண்டுசென்றப்
பஞ்சித்தளிரடிப்பூங்கொம்பர்மீதெதிர்பாய்தலெண்ணின்
விஞ்சிக்கொடிக்கந்தக்கொம்பர்பற்றுமென்றுமேற்சொல்வதே. (௩௫)

விஞ்சிக்கொடி-பெருமையுடையவித்தக்கொடிக்கு. பற்று-ஆதாரம்.

பண்புபாராட்டல்.

கலைபொன்றுவேணியர்கோடீச்சுரேசர்கயிலையென்னு
மலைமுன்விளர்த்ததுமேருவுஞ்சென்னிவணங்கிநின்ற
தலையுற்றதொன்றன்றியாவுங்குறைபட்டவாமெனின்
முலைநகையாண்முலைக்கொப்பென்றெதனைமொழிவதுவே. (௩௬)

பயந்தோர்ப்பழிச்சல்.

பந்தாடுமைபங்கர்கோடீச்சுரத்தர்பைம்பொன்வெற்பின்
வந்தாகவஞ்செயும்வேள்வெங்கணைகளைமாற்றியென்றன்
சிந்தாகுலந்தீர்த்தினிதாண்டருளியசேதமொழியைத்
தந்தார்கண்மாமனுமாமியுமாருகதாரணிக்கே. (௩௭)

ஆகவம்-போர். மாமன்-திருவிளையசன். மாமி - திருவினுஞ்சிறந்தவள். (மீ குறுகியது.)

கண்படைபெறாதுகங்குனோதல்.

நதியுறுவார்சடைக்கோடீச்சுரேசர்கயிர்வரைவான்
மதிபொன்மதியையயக்கும்வண்டார்மதன்வண்டலைக்கும்

பொதியமலையத்தனிக்காண்மலையும்புகலுமினிக்
கதிரவெல்லைகண்டெல்லையெப்போதிங்குக்காண்பதுவே. (௩௯)

தந்தெய்வந்தருமெனச்சேறல்.

வெங்நாககங்கணர்கோடீச்சுரோசர்வியன்சிலம்பிற்
செங்காண்மலர்மேற்றிருவனையாளைமுன்சேர்த்ததெய்வ
மிந்நாளுஞ்சேர்த்திடுமீதல்கற்றோன்றுமீவர்கண்டாய்
சொன்னூல்லமுநெஞ்சமேசெல்குவோமந்தச்சூழ்பொழிற்கே. (௩௬)

முந்துறக்காண்டல்.

விழியொருமூன்றுடைக்கோடீச்சுரவள்ளல்வெற்பின்மத
னழகெனும்வெள்ளத்தகச்செங்கையாசையந்தூரிகைதோய்த்
தெழுதியவோவியமீதென்னவோர்மங்கையின்னுருவாய்
நிழல்செயிக்காவினங்நற்றவப்பேறெதிர்நிற்கின்றதே. (௪0)

முயங்கல்.

விடைபட்டகேதனர்கோடீச்சுரநம்பர்வெற்பின்மலர்த்
தொடைபட்டகோதையிவள்வாயமிர்தச்சுவையினுக்குப்
படைபட்டவேலையமுதொத்திடாதுபகருமது
கடைபட்டதேயன்னதாகும்விண்மேவுகடவுளர்க்கே. (௪௧)

கோதையிவள்-கோதையுடையவிவள். கடை-தாழ்வு, கடைதல்.

புகழ்தல்.

அயனோர்ந்திடாமுடிக்கோடீச்சுரநம்பரம்பொன்வெற்பிற்
புயலனநீரிவள்கூந்தற்குமுன்னர்ப்புகன்றிடுமுட்
பயமுற்றிருந்திடினேர்தான்சிறிதுபயமொழிந்தா
னயமுற்றிடர்கடற்போய்வீழவேண்டுமவின்றனனே. (௪௨)

ஆயத்துய்த்தல்.

மீயுற்றபூம்பொழிற்கோடீச்சுரநம்பர்வெற்பிடத்திவ்
வேயுற்றசாரற்றினைப்புனத்தேயன்றென்மீதுவைத்த
நேயத்தனைந்துகரணஞ்செய்தாயினிநீயகன்றுன்
ஞயத்துறைமணியஞ்செய்திடுபணியாரணங்கே. (௪௩)

தலைவன்பாங்கனைச்சார்தல்.

செறிப்புறுவான்புகழ்க்கோடீச்சுரோசர்சிலம்பிடைநா
முறுப்பமைகன்னூலிடைநீடுமைம்பாலுறுதொடர்பைச்

சிறப்புறுகேள்விபெறுபாங்கனுக்குத்தெளிவுபெறக்
குறிப்பினுமோதும்வெளிப்படைச்சொல்லினுங்கூறுதமே. (௬௪)

நூலிடையுநீடுகூந்தலு முடையாளுடைய தொடர்பை நன்னூலிடத்து ஒருவன்முதலியஐம்பாற்றொடர்பை.

பாங்கன்றலைவனையுற்றதுவினாதல்.

மன்றாடுமீசர்தென்கோடீச்சுரவெற்பவாய்மையுளா
யொன்றாதவரிடத்தொன்றினையோகடலேழுமொன்றாய்ச்
சென்றார்த்தெழினுமதியோடிரவிதிசைகெடினுங்
குன்றாதநின்புயக்குன்றமென்னேயிங்ஙன்குன்றுற்றதே. (௬௫)

தலைவனுற்றதுரைத்தல்.

விரித்துச்சொலற்கென்றனுன்முடியாதன்பமேற்பகையைச்
சிரித்துச்சிதைத்திட்டகோடீச்சுரேசர்சிலம்படியிற்
சரித்திடுமென்மனப்போதகம்போம்வழிதன்னினின்றோர்
வரிக்கண்மின்னாங்குசத்தாலதனைமடக்கியதே. (௬௬)

மனப்போதகம்-மனயானை. அங்குசம் - அழகியதனம், தோட்டி.

பாங்கன்கழறல்.

கடுவமர்கண்டத்தர்கோடீச்சுரேசர்தண்கார்வரைமேற்
கொடுவடிவேலவிருபால்வழக்குங்குறித்தெவர்க்கும்
படுவுறவோதிடுநீயின்னதென்னப்பகுத்துரைக்கு
நடுவறியாதொருபேதைகண்ணென்னிங்குநண்ணியதே. (௬௭)

தலைவன்கழற்றெதிர்மறுத்தல்.

கனவல்விடபத்தர்கோடீச்சுரமன்னகன்னிநுத
வினவுண்மணிக்குழைமாமுலைபார்வையெனவுரைக்குந்
தனுவுமகரமுங்கும்பமுமீனமுஞ்சார்ந்தங்குநீ
முனமுறநோக்கிடினென்பவிவ்வாறுமொழியலையே. (௬௮)

பாங்கன்றலைவனைப்பழித்தல்.

விளையார்கடுக்கையர்கோடீச்சுரவெற்பமேவிடுமுன்
னுளை*யார்கலைமதியோர்மாதரைப்பணிக்கொல்கியதாற்
றிளையார்கலிசுற்றிடத்தேயினியொருசிற்றெறும்பிற்
கிளையாயிடுமகமேருவுநீடுமிமயமுமே. (௬௯)

* கலைபொருந்தியமதி - தலையிலிருக்கும்பணி, மாதினைப்பணி.

### தலைவன்வேட்கைதாங்கற்கருமைசாற்றல்.

தேன்வளர்கொன்றையர்கோடீச்சுரேசர்சிலம்பினயற்
கான்வளர்மும்மதநால்வாய்களஞ்சக்கணைதொடுத்தேன்
வான்வளர்சிங்கம்வரினும்விடேன்மதிவாண்முகத்தோர்
மான்விழிநோக்குமுன்கைவில்லுமம்புமவழுவியவே. (௫௰)

### பாகன்றன்மனத்தழுங்கல்.

பூங்கயிலாயத்தர்கோடீச்சுரேசர்பொதியவரைத்
தாங்கயிலோனுக்குநாமீண்டிசைமதிதன்குரவற்
காங்கணைநூற்குப்பொருள்கூறுதலொக்குமன்றியுநோய்
நாங்களையாதுபின்னுங்களையேற்றுதனன்கலவே. (௫௧)

### தலைவனோடழுங்கல்.

மலையேறுகையரன்கோடீச்சுரவெற்பவானூறுருன்
கலையேறியமதிதாரணிபூடுகலந்திடொரு
தலையேறிருட்குத்தளர்ந்திடுமேல்வலிசார்த்துவரா
ரலையேழும்வெப்புறினெப்புனலாலதையாற்றுவதே. (௫௨)

### எவ்விடத்தெவ்வியற்றென்றல்.

மின்னுறுசூற்படைக்கோடீச்சுரசித்தர்வெற்பவந்தப்
பொன்னெழின்மான்கஞ்சப்பூவிடத்தோவிந்தப்பூவிடத்தோ
மன்னுறுநீள்விழிவாளியற்றேவடிவாளியற்றே
வின்னலுறேல்புகலின்னதென்றெவ்விடத்தெவ்வியற்றே. (௫௩)

வாளியற்றே-வாளிபோல்வதோ, வாளினியல்புடையதோ, எவ்வியலுடையது.

### இவ்விடத்திவ்வியற்றென்றல்.

சேவணக்கேதனர்கோடீச்சுரநம்பர்தென்பழனக்
காவணநள்ளாறிடமக்கமலைதன்கைவநசப்
பூவணஞ்சத்திமுத்தங்கண்முறுவல்புரியளகை
மாவனஞ்சாயலொண்மாயூரமுந்திவலஞ்சுழியே. (௫௪)

பழனம்-ஒரூர், பழத்தினழகு. காவணம் நள்ளாறு-இரண்டூர், சோலையிடத்துற்றவழி. கமலை-ஆரூர், திரு. பூவணம்-ஒரூர், பூவின்வண்ணம். சத்திமுத்தம்-ஒரூர், வேல்முத்து. அளகை-கூந்தலழகு, தஞ்சநகரம். மாவனம்-வண்டின்கூட்டம், ஒரூர். மாயூரம்-ஒரூர். மயில். வலஞ்சுழி-வலஞ்சுழித்திருக்கின்றசுழி, ஒரூர்.

பாங்கனிறைவனைத்தேற்றல்.

நாட்டாருமன்னவகூடார்புரத்தைநகைத்துவன்னிக்
காடாக்கியசிவன்கோடீச்சுரமன்னகாரிகையை
யேடார்மலர்ப்பொழிலூடேகிநான்கண்டிவண்வருவ
னீடார்வரைப்புயம்வாடாதுநின்றிடிமைப்பொழுதே. (௫௫)

பாங்கன்குறிவழிச்சேறல்.

செந்நெறிச்சேர்த்தருள்கோடீச்சுரேசர்சிலம்படியை
யுந்நெறிகூட்டுமின்வைகாவிடமஃதோங்கதனுக்
கந்நெறியாமத்திருவேரகத்தையடையுநெறி
யிந்நெறியாகுமிதுவேயிறைவனிசைத்திட்டதே. (௫௬)

வைகா-இராத, ஒரூர்.திருவேரகம்-திருவிருக்குமழகியவிடம், ஒருதலம்.

பாங்கனிறைவியைக்காண்டல்.

மெய்யாகநூலினர்கோடீச்சுரசித்தர்வெற்பினன்சொ
லையாறதுதிங்களூர்திருவாலம்பொழிலதுமேற்
கையாலொண்காந்தள்வனாமேவியாங்குக்கலக்குறச்செய்
மையார்கயற்கண்விசையமங்கைத்திருமற்றிவளே (௫௭)

ஐயாறு-அழகியவழி,ஒருதலம். திங்களூர் திருவாலம்பொழில்-மதிமேற்றவழுமாலம்பொழில்,இரண்டூர்.விசையமங்கைத்திரு-மங்கையாகியதிரு,விசையமங்கை-ஒரூர்.

இகழ்ந்ததற்கிரங்கல்

போரண்டுசூலத்தர்கோடீச்சுரவெற்பின்பொன்னிமருங்
கேரண்டமாபுரமேன்மைகொளின்னம்பரின்னவற்றை
நேரண்டநோக்கிடிஞருருகாரிதுநெஞ்சினெண்ணு
தாரண்டுவேலற்பழித்தனநம்மறிவத்தனையே. (௫௮)

பொன்னிமருங்கு-பொன்னொப்பாளதிடை, காவிரிப்பக்கம்-எரண்டமாபுரம்-கொட்டையூர்,அழகியவுடம்பு.மேன்மைகொளின்னம்பர்-மேல்மையெழுதப்பட்ட வினியவம்புபோன்றகண்,பகைமையுற்றவின்னம்பரெனனூர்தலம்.

தலைவனைவியத்தல்.

சூலாயுதத்தான்கோடீச்சுரமன்னதோகையிவ
ளூலாமிடையொடுசேலானநோக்கினைநோக்கினரி

மாலாகிநிற்பன்மலரோன்பிரமமருவிடும்
வேலாளிவண்விட்டவனுற்றதாற்றிறஞ்மிக்கவனே. (௫௬)

தலைவியையவியத்தல்

செக்கர்நன்மேனியர்கோடீச்சுரேசர்சிலம்பிலிவண்
மைக்கண்சிதறியமால்விடந்தீர்த்திடும்வாயமிர்த
மிக்கதனப்பொற்குடநெடுங்காமமென்வேலையினின்
றக்கனவின்பக்கரையேற்றிடும்மாசனையே. (௬௰)

தலைவன்றனைச் சூத்தலைவிநிலைகூறல்.

சுரும்புறுகொன்றையர்கோடீச்சுரேசர்சுடர்க்கிரிமேற்
கரும்புருவச்சிலைதன்னொடுநீலக்கணையுங்கொடு
பொரும்படைமாரன்றுணைபோலநின்றதப்பூங்கொடிவல்
விரும்பனெஞ்சதிருநறையூரவ்விரும்பொழிற்கே. (௬௧)

தலைவன்சேறல்.

படித்தலம்போற்றிடுகோடீச்சுரநமபர்பைம்பொன்வெற்பின்
வடித்தடங்கண்ணிமுலையங்கையின்செரிவின்வன்பகையென்
றடித்திடுமோமுன்பறித்திடுமோநின்றதட்டிடுமோ
தடித்துழுபந்துசெங்காந்தள்பைங்கிள்ளையைத்தண்பொழிற்கே. (௬௨)

தலைவியைக்காண்டல்.

செந்நெல்விளைவயற்கோடீச்சுரசித்தர்திண்சிலம்பின்
மன்னவபேரின்பபீடமுநீவன்முன்வாசுகிநற்
பன்னகம்பூட்டித்தனமலைமேலெனப்பன்னுவள்போற்
பொன்னிறமால்வரைகாட்டிநிற்கின்றனள்பொற்றொடியே. (௬௩)

வாசுகிநற்பன்னகம் - வா + சுகி + நற்பல் + நகம். வாசுகியெனும்பாம்பு.
நிறம்-மார்பு, ஒளி.

கலவியின்மகிழ்தல்.

சலங்காத்தவேணியர்கோடீச்சுரேசர்தடத்தூரத்தி
லலங்காவெழுத்தசைசீர்மேவுபந்தமடிதொடைகொண்
டிலங்காவளருமுறுப்பியல்பாவுற்றிடுமினைய
நலங்காமுறுகாரிகையின்பமீங்கெய்திநண்ணினமே. (௬௪)

அசையாததொய்யிலெழுத்திணங்கிய சிறப்புப்பொருந்திய பந்துபோன்ற
தனத்தினழகும் மடித்தமாலை பூண்டவுறுப்பாகியமார்பும் பொருந்திய
மடந்தை-எழுத்துமசையுஞ் சீருந் தளையுமடியுந் தொடையுங் கூறுமுறு
ப்பியலும் பாவினியலும் பொருந்தியகாரிகையாகிய நூலின்பம்.

புகழ்தல்.

திங்கட்கொழுந்தணிகோடீச்சுரேசர்சிலம்பிலிவ
ளங்கத்திற்காலமுகொத்திடுங்கஞ்சமனையமுகு
மங்குலைச்சாரந்துறைமின்னைக்குமற்றைவடிவுசுருக்
கிங்கெப்பொருளினுங்காணேமுழுதுமியைவதுவே (௬௫)

பாங்கியோடுவெருகெனப்பகர்தல்.

படையுற்மபூதத்தர்கோடீச்சுரேசர்பனிவரைநா
லிடையுற்றிடுநல்லனமேசின்பாங்கிக்கினியொளித்து
நடையுற்றிடுதனலனன்றவளொடுநாளைவந்திக்
கடையுற்றிடுமனையன்றுடாநாவெதிர்கைக்கொளவே. (௬௬)

பாங்கிற்கூட்டல்.

எனைத்தேடியாள்சிவன்கோடீச்சுரவெற்பிலெய்திநின்னைச்
சுனைத்தேடியாங்குறுங்காமனைத்தேடிடுந்தோழிமுன்னிங்
குனைத்தேடினேனெனவொன்றேறுதியன்னவளொடொன்றிடுநீ
கனைத்தேடியைவண்டுகொம்போதிபாடுங்கதுப்பணங்கே. (௬௭)

பாங்கியையமுற்றேர்தல்.

கறையுறுகண்டத்தர்கோடீச்சுரசித்தர்கார்வரைமே
லுறையுமிம்மாதந்தமாதவர்போன்முன்னுணவொழித்தாண்
மறைபுகல்வாளம்மனைவெறுத்தாருடல்வாட்டமுற்று
ளறையுமிவையிதனுலுற்றனவென்றறிந்திலமே. (௬௮)

ஐயந்தீர்தல்.

அரியமறைப்பொருடன்னைமுன்னால்வருக்காலடியிற்
றெரியவுணர்த்தான்கோடீச்சுரமன்னதேமொழியின்
சரியைகிரியைகளையந்திரிபின்மைசார்ந்தினிது
விரியுறும்போதோரிறையோகஞானம்விளைக்கின்றவே. (௬௯)

இறையோகஞானம்-ஓரிறைவனதுபுணர்ச்சியுண்மையறிதல்.

பிறைதொழுகென்றல்.

அணிதாங்குகோடீச்சுரேசர்தங்கட்பொறியாதலினன்
மணிதாங்குவேலைமகிழ்வுற்றதாலுயர்வானகத்திற்
கணிதாங்குடுக்களின்காதலனம்பிறைகந்தனைக்கும்
பணிதாழ்கருங்குழன்மாதேபணியிற்பலன்றருமே. (௭௰)

கட்பொறி - கண்ணிலெழுந்ததீப்பொறி, கண்-மணி-பொருந்திய.வேல்-வேலை,சமுத்திரம்.கார்த்திகையுடுக்களின்-பிள்ளை-நட்சத்திரநாயகன்.

சுனைவியந்துரைத்தல்.

தோடுறுங்காதினர்கோடீச்சுரநம்பர்துய்வரைநீ
யாடுறும்போதிற்பிறழும்பணிகளவைதிருத்திக்
கோடுறுநெற்றித்திலகமுந்தீட்டிக்குறுவெயரீந்
தேடுறுங்கோதைநின்கோதையிற்சூட்டியதெச்சுனையே. (எக)

சுனைநயப்புரைத்தல்.

நங்கந்தரத்தருமைநகீந்திடுமெத்தர்நஞ்சமரும்
வெங்கந்தரத்தர்தென்கோடீச்சுரநித்தர்வெற்பிடத்திற்
சங்கந்தருமுத்தந்தந்திடுமேலென்றனையுமளி
யங்கந்தருவமிசைக்குஞ்சுனைக்கழைத்தேகணங்கே. (எஉ)

கந்தருவம்-பண், எண்வகைமணத்திலொருமணம்.

தகையணங்குறுத்தல்.

மருமலரோன்பணிகோடீச்சுரேசர்வரைவருநீ
திருமகளோமதன்காதலியோவெங்கடேமொழித
னுருவுளையன்னள்புனலாடற்கேகினளூற்றிடுஞ்சற்
றிருவிருமேவிளையாடலாமிங்கிருவிருமே. (எங)

நடுங்கநாட்டம்.

ஆரூர்மழுவினர்கோடீச்சுரவெற்பிலாரணங்கே
பாரூர்வதுவோபறப்பதுவோவெம்பகையிடத்திற்
போரூர்செங்கோடுறுவன்கொடுங்குன்றம்புரையுமொரு
காரூர்கைம்மாக்கொளவேலெஃறிந்தானொருகாவலனே. (எச)

தலைவன்பாங்கியையிரவுவலியுறுத்தல்.

கருதடியார்கட்குயர்வரநல்குங்கருணையினார்
பருவரைவில்லினர்கோடீச்சுரவெற்பிற்பாங்கியெனுந்
திருவிங்கிருக்கின்றனளிவட்போற்றினச்செல்வநல்கு
மருவினச்செல்வமுன்வேண்டின்பமெய்தும்வழியிதுவே. (எ[illegible])

பாங்கியையூர்வினுதல்.

நதியிருக்குஞ்சடைக்கோடீச்சுரேசர்நகத்துறுநின்
பதியிருக்குந்தலம்வானோபுவியோபகர்தியிங்குக்
கதியிருக்குந்தலந்தேடிடுவேன்சென்றுகண்ணுறவே. (எசு)

### பெயர்வினாதல்.

கந்தனைத்தந்தவர்கோடீச்சரவெற்பிற்கண்டவனை
யிந்திரையென்றனன்யானெனதுள்ளமிரதியெனு
மந்தரர்கோன்றுணையென்றார்சிலரிதையாய்ந்திடுவான்
வந்தனனின்பெயரிங்கெனக்கோதுகவாணுதலே (௭௭)

### மான்வினாதல்.

படிபுகழ்சீரினர்கோடீச்சரத்தெம்பரமர்வெற்பின்
முடிமிசைவேட்டத்தினெய்திடுமென்கணைமுன்னர்த்தப்பிப்
பிடியெனவோர்மானடைந்ததுநானும்பிடிபிடியென்
றடியுறவந்தனன்காணேன்கண்டாற்சொல்லணியிழையே. (௭௮)

### வழிவினாதல்.

பெருவானவர்புகழ்கோடீச்சுரேசர்பிறங்கன்மின்னே
கருவாய்வனத்தைக்கடந்தெளியேனுட்களிப்பினொடு
மருவாய்பொழில்சூழ்சிவபுரங்கூடும்வழியுனது
திருவாய்மலர்ந்திங்கிதுதானெனவொன்றுசெப்புகவே. (௭௯)

கருவாய்வனம்-கருநிலக்காடு. கருவிற்படும்பிறவிக்காடு.
சிவபுரம் - சிவலோகம், ஒருதலம்.

### மொழிவினாதல்.

ஆலார்நிழலுறைகோடீச்சுரவள்ளலம்பொன்வெற்பின்
பாலாரிடத்திற்சிலர்திருவாய்மொழிப்பண்பறிந்தேன்
சேலாம்வரிவிழியாயித்தலத்திற்செவியுணா
மாலாமெனக்குன்றிருவாய்மொழியொன்றுவந்துரையே. (௮௰)

### இவர்மனத்தெண்ணம்யாதெனத்தேர்தல்.

வையுற்றசூற்படைக்கோடீச்சுரேசர்வரையிலிவர்
மையுற்றவேழம்பல்கேழலெய்தோமெனவன்மைசொல்வார்
கையுற்றதுதழைவாயுற்றதுபொய்கருத்துற்றதூஉ
மெய்யுற்றதூஉமறியேமெவரோவிந்தவித்தகரே. (௮௧)

### எண்ணந்தெளிதல்

குழைகாட்டுங்காதினர்கோடீச்சுரேசர்குவட்டிலிந்த
நுழைகாட்டிடையிவர்வில்லோடம்பின்றிநுழைந்துவந்தோர்

மழைகாட்டியமதமாவந்ததோவெனுமாற்றம்பொய்கைத்
தழைகாட்டிநங்குல்மானைக்கொண்டேகிடச்சார்ந்தனரே. (௮௨)

இருவருமுளவழியொருமையிற்போதல்.

திறல்விடையூர்தியர்கோடீச்சுரேசர்திருவருளு
முறுமுனர்நாஞ்செய்தவப்பேறும்போலிங்கொருமுகிலிற்
செறியிருமின்போலாசியும்பாங்கியுஞ்சேர்ந்துறைந்தார்
குறுகிவின்மாரன்கொடுங்கோனடாத்துதல்கூறுவமே. (௮௩)

அவ்வகைகெடுதியுண்மனம்வினாதல்.

திங்கட்கொழுந்தணிகோடீச்சுரேசர்சிலம்படிக்கட்
டங்கியவென்மனமாங்கொருகாலென்றனையறியா
தெங்குஞ்சரிக்குமுடன்மீண்டிடுமஞ்சியிப்பொழுதீண்
டுங்கடம்பாலுற்றதோமங்கைமீருண்மையோதுமினே. (௮௪)

ஒழிந்ததுவினாதல்.

மாலோர்புறங்கொண்டகோடீச்சுரேசர்வரையிடைநீ
ராலோலமென்னுங்குரலேவழிமறித்தன்னமன்னீர்
பாலோடுங்கிள்ளைகளெல்லாம்வருவித்துப்பைந்தினையின்
மேலோங்கிடுகுரலெல்லாமினிதுவிருந்திடுமே. (௮௫)

பாங்கியெதிர்மொழிகொடுத்தல்.

மலையாயவில்லினர்கோடீச்சுரேசர்வரையிலுன்கைத்
தலையார்கணைக்கும்விழிக்குமனத்திற்குந்தப்பியெங்கு
நிலையாதிங்குற்றகலைகண்டிலேமையநீடுநின்போற்
கலையாய்வதற்குப்பொழுதுளதோபுனங்காப்பவர்க்கே. (௮௬)

இறைவனைநகுதல்

இழைவளர்மார்பினர்கோடீச்சுரேசரிமவரைமேற்
கழைமதன்போதுகொண்டெய்திடலோர்ந்திவர்கான்விலங்கைத்
தழையதினெய்திடவெய்தினரீண்டித்தழையதனுன்
மழைமதவேழங்கயமாமுழையுமறிதருமே. (௮௭)

பாங்கிமதியினிலவரவர்மனக்கருத்துணர்தல்.

நிறக்குந்தினைகொண்டுகோடீச்சுரநித்தர்நீள்வரைக்கட்
பறக்குஞ்சுகமிவள்பாராளிவன்சுகம்பார்க்குமிவன்

டுறக்குஞ்சரத்தைமறந்துன்னவள்விழிவன்சரத்தை
யுறக்கண்ணுறுமிவர்வேட்டமூங்காப்புமுணர்வுற்றவே. (௮௮

தலைவனுட்கோள்சாற்றல்.

சிற்றேரிடைபங்கர்கோடீச்சுரேசர்திருவருண்முன்
பெற்றேன்சிந்தாமணிவேண்டினுநீவிர்பெறக்கொடுப்பேன்
பொற்றேரினையச்சுறுத்தல்குலீரிக்குப்போதநும்பாற்
குற்றேவல்செய்யும்விருப்பினுற்றேனென்னுட்கோளிதுவே. (௮௯)

பாங்கிகுலமுறைகிளத்தல்.

காரூர்களத்தான்கோடீச்சுரமெனக்கற்றவர்சொல்
பேரூருனதிடஞ்சீறூரெமதிடம்பேருறநீ
பாரூர்முழுவதுங்காப்போனெங்காவலிப்பைம்புனநீ
கூரூர்படைமன்னனுங்குறமாதர்குறித்தருளே. (௯௰

தலைவன்றலைவியையுயர்த்தல்.

நங்கேதந்தீர்த்தருள்கோடீச்சுரநம்பர்நாட்டினிடைச்
செங்கேழ்வண்டாமரைசேற்றெழுங்கள்ளியிற்சீர்கொளகி
லிங்கேயுதித்திடுமெங்கேயுதிக்கினெனன்னேதில்பொருள்
சங்கேயெனுக்களவுங்கள்ளைபம்பொன்னுமத்தன்மையளே. (௯௧)

பாங்கியறியாள்போன்றுவினவுதல்.

நனையாடுதண்பொழிற்கோடீச்சுரநம்பர்நல்வரைமேற்
சுனையாடுநர்பலர்பந்தாடுநர்பலர்சூழ்ந்தெழிலம்
மனையாடுநர்பலரின்னுருளிங்ஙனம்வாள்விழிகொண்
டுனையாகிவித்தவளார்மன்னவாவுண்மையோதுகவே. (௯௨)

தலைவனிறைவிதன்மையியம்பல்.

நாகமங்கத்திற்புனையும்புராணர்நவின்மறையார்
பாகமங்கைக்கருள்கோடீச்சுரத்தெம்பரமர்வெற்பி
லாகமம்பொன்னுருக்காவியங்கண்ணிடையாய்மதனூல்
சோகமங்குற்றிடவென்னையிவ்வாறுசெய்துமொழிக்கே. (௯௩)

பாங்கிதலைவியருமைசாற்றல்

உன்னுமப்பொன்னிங்கெளிதினுமுதையவுன்றனக்குப்
பொன்னுமின்பந்தருந்தேருமுரம்பெறுபோர்க்களிறு

மின்னும்பிறவுமெங்கோடீச்சுரேசரெழிற்பதத்திற்
பன்னுந்துதியும்பரிவுமுள்ளோர்க்குப்பலிப்பனவே. (௬௪)

தலைவன்றலைவியின்றியமையாமையியம்பல்.

முன்னரவ்வேதனுங்காணாமுடியினர்முத்தநகை
மின்னமர்பாகத்தர்கோடீச்சுரமன்னவின்னுதலாய்
கன்னற்சிறுவிலைதன்னுண்மெலிந்திடிக்காலத்துங்க
ணன்னமில்லாவிடிற்சற்றுநில்லாதென்றனாருயிரே. (௬௫)

கன்னற்சிறுவிலை-சிறியகருப்புவின்னாயகன்,நாழிகைதோறுங் குறைகின்றசிறுவிலைக்காலம்.

பாங்கிநின்குறைநீயேசென்றுரையென்றல்.

மின்னுறுதண்மதிக்காந்தமென்கல்லகமேவுமெழி
லுன்னுறுவண்ணமதிமுகங்காணினுருகுமன்றிப்
பொன்னுறுகொன்றையாகோடீச்சுரேசர்பொதியவெற்ப
வென்னுரையாலுருகாதேகிநீயேபிசைநினைவே. (௬௬)

தலைவன்பாங்கியைப்பழித்தல்.

மட்டார்மலர்ப்பொழிற்கோடீச்சுரநித்தர்வண்சிலம்பிற்
பெட்டாற்கரையேற்றெனவிரந்தோரைப்பெருகுவெள்ள
நட்டாற்றிடைவிடுவாரின்மின்னேநினைநம்பினைக்கை
விட்டாயுன்வஞ்சியெனுமபேர்ப்பொருளைவிளக்கினையே. (௬௭)

பாங்கிதலைவிபேதைமையூட்டல்.

தண்ணார்கடுக்கையர்கோடீச்சுரவெற்பசாற்றுமெங்கள்
பெண்ணாரமுதனையாண்மிகப்பேதைபெரிதுகந்து
கண்ணாடிநீழலொடுபேசுவாள்கையிற்பாவையையீ
துண்ணாதென்னென்பளெண்ணாநின்னுள்ளத்துறுதுயரோ. (௬௮)

தலைவன்றலைவிமூதறிவுடைமைமொழிதல்.

செங்கையங்காளினர்கோடீச்சுரேசர்சிலம்பிடைத்தன்
னங்கயற்கண்கொண்டெனக்குமைக்காட்டியனங்கனுக்கு
மிங்கயவின்னவன்போகவிடேலென்றிசைத்ததிரு
மங்கையைப்பேதையென்றோதலெவ்வாறுமடந்தையரோ. (௬௯)

பாங்கிமுன்னுறுபுணர்ச்சிமுறையுறக்கூறல்.

கொற்றவமுன்னிற்சமைவுற்றவன்னத்தைக்கொண்டிடின்னு
முற்றிடானென்னைகோடீச்சுரவள்ளலேலாங்கருளான்
மற்றிருவாரமணிமுடியாதிமருவுமின்பம்
பெற்றிருப்போர்கட்குவேண்டிடுமோபின்பிறரருளே. (௰)

தன்னிலைதலைவன்சாற்றல்.

காதார்கயற்கண்ணிகோடீச்சுரநம்பர்காசினின்றிப்
போதாரளகக்குமரியுற்றூடப்புகனெறிக்கண்
மீதாம்வடமலையாதிகணோக்குற்றுமேவினன்முன்
னீதானஞ்செய்திடினுன்படிவேனச்சநெஞ்சிலற்றே. (௰௧)

போதாரளகக்குமரி-மலர்பொருந்தியகூந்தலுடையபெண்,அறியநீர்வடிவாகியவிந்நதி.ஆட-மூழ்க,புணர.நெறிக்கண்-வழியில், நெறித்தகண். வடமலை-வடமணிந்தமுலை,நீதரின்,மூழ்குவன்,புணர்வேன்.

பாங்கியுலகியலுரைத்தல்.

கார்கொண்டவாணவமாதிகணீக்கிக்கலந்திடன்பர்க்
கேர்கொண்டவின்பருள்கோடீச்சுரவள்ளலேமவெற்ப
வார்கொண்டபூவையுறுகன்னிகையைவரைவுபெற
நார்கொண்டிசைப்பதுமாலையதாமிந்நன்னிலத்தே. (௰௨)

நீவரைகென்றல்.

வன்னிக்குமுன்னர்நும்ரோடெமருமகிழ்வுபெற
மன்னித்தலம்புகழ்கோவேதரளமும்வச்சிரமும்
பொன்னித்திரையெறிகோடீச்சுரநம்பர்பொற்சிலம்பின்
கன்னிப்பிடியைவரைந்தணைப்பாய்புயக்கம்பத்திலே. (௰௩)

தலைமகன்மறுத்தல்.

ஆவாவெனக்கைபிளைத்தாற்றழுங்குமவரையொரு
நாவாய்செய்தேறிக்கொடுகரைவாவெனுநண்பவொத்தாய்
தேவாதிபர்பணிகோடீச்சுரேசர்சிலம்பணங்கை
நீவாகுடன்வரைந்துன்மாலகற்றென்றுநேரிழையே. (௰௪)

பாங்கியச்சுறுத்தல்

படமன்னுபூணினர்கோடீச்சுரவெற்பின்பாலெம்முன்னர்க்
கடன்மன்னுமாவிற்களித்துநில்லேலிதுகண்டனரோ

லடன்மன்னுமிக்குன்றவாணர்கடாமையுற்றையவுனே
விடமென்னவந்துவளைந்துகொள்வாரிந்தவேலையிலே. (௱௫)

தலைவன்கையுறைபுகழ்தல்.

மெய்யேந்துமிம்மணிகோடீச்சுரசித்தர்வெற்புறைவீர்
மையேந்துவரியொளிநீள்கயிலைவரணைகம்பை
யையேந்திவற்றினிடையதிதன்பேரறையுமுன்னர்க்
கையேந்துவானிந்திரன்கொணர்ந்தேனுங்களுக்கெளிதே. (௱௬)

உவரி,கயிலை, வரணை, கம்பை. இவற்றிடையெழுத்தாகிய வயிரம். இதன்பேர்.

பாங்கிகையுறைமறுத்தல்.

மேலோர்புகழ்பரன்கோடீச்சுரவள்ளல்வெற்புறைவோ
மேலோம்பிறரிடையாங்கொடுப்போமிவ்வெழின்மணித்தார்
வேலோடுலவுமரசேயுனக்காமிலைந்திடுநின்
பாலோர்க்களித்திடுதவுனைப்பாடியபாவலர்க்கே. (௱௭)

ஆற்றுநெஞ்சினோடவன்புலத்தல்.

மழைநிகர்கண்டத்தர்கோடீச்சுரேசர்வனாயிநெஞ்சே
யுழைநிகர்நோக்கியரோலாதுவாடென்கையொண்டளிரைத்
தழையுறுமுன்னர்க்குழையெனமேலெவர்சாற்றினரோ
குழைவுறுகின்றதிதுநீகுழைவதென்கூறுகவே. (௱௮)

பாங்கிதலைவனையாற்றுவித்தகற்றல்.

ஒருவிடிப்போதிதுகாலமன்றெல்லையுதையத்துவா
மருவிடுன்மாலையைமன்னவன்னுடன்மனந்திருத்தி
நிருவிகற்பத்தினர்கோடீச்சுரேசர்நெடுவனைமே
லருவியின்மாமுலைமீதுறவாக்குவனுமிதுவே. (௱௯)

கிழவோன்மடலேபொருளெனமதித்தல்.

பூவேறினுனுமலையேறினுமுன்போற்றிசைப்பச்
சேவேறிவந்தருள்கோடீச்சுரேசர்சிலம்பினிடை
நீவேறுகண்ணிக்கலையனெஞ்சேயிங்குநீடுமடன்
மாவேறிமெள்ளப்பிடித்திடுவோமந்தவன்குயிலே. (௱௰)

வேறுகண்ணிக்கு - அலையாதே, வேறுநினைந்துவாடாதே.
மடன்மாவேறி-பூவுடையமாவில்; பனைமடலாற்செய்தபரிமேலேறி.

உலகின்மேல்வைத்துரைத்தல்.

கோவார்நுதலினர்கோடீச்சரவெற்பிற்கூறெளிதின்
மேவாமகளிர்கண்மேவுறுவானெஞ்சின்மேவுற்றுளோர்
பாவாயவர்கடமாவணத்தூடுபனையையொரு
மாவாகச்செய்துநடத்துவரீதுமனுமுறையே. (௱௰௧)

அதனைத்தன்மேல்வைத்துச்சாற்றல்.

விடமுறுகண்டத்தர்கோடீச்சரமன்னமின்னினையோர்
படமதிவீதென்னெழுத்தென்றெவரும்பகுத்துரைக்கத்
திடமுறத்தீட்டிக்கரங்கொடுநாளைந்தெரித்தபனை
மடன்மிசைநுப்பூர்த்தெருமேல்வருவேன்மதிநுதலே. (௱௰௨)

பாங்கிதலைமகளைவைபவத்தருமைசாற்றல்.

விழியுறுபாலத்தர்கோடீச்சரமன்னமின்றிருவாய்
மொழியுறுகாஞ்சிதிகழுறுசீரங்கமுந்திவற்றை
யெழிலுறுமன்னவெழுதுவையோவுய்த்தெழுதுவையேற்
கிழியெனக்கண்டோருணாயாதெழுதக்கிழிதனையே. (௱௰௩)

தலைமகன்றன்னைத்தானேபுகழ்தல்.

வண்ணவெண்ணீற்றரன்கோடீச்சரவெற்பின்மாதரையோர்
விண்ணுக்குருவிலையென்பாரதுவுண்டுமேலதன்க
ணண்ணுஞ்சுனையுண்டதிலொருதாளிருநாண்முகையுண்
டெண்ணிலவைசொல்லன்றெழிதித்தருவனிங்கிவ்வண்ணமே. (௱௰௪)

மாதரையோர்-உலகத்தோர், மாதினிடையாகிய.
விண்ணுக்கு-விசும்பிற்கு. அதுவுண்டு-அதுவுளதுமெய்தான்.

பாங்கியருளியல்கிளத்தல்.

சூலாயுதத்தினர்கோடீச்சரவெற்பிற்றேன்றிடுநீ
சேலாயகண்ணிபொருட்டினித்தாலஞ்சிறைக்கிலிதன்
மேலாயவண்டம்பலபோம்பலவுயிர்வீதலுறு
மாலாயவுன்னையுருத்திரனுமென்பர்மற்றயனே. (௱௰௫)

பாங்கிகொண்டுநிலைகூறல்.

ஓத்தேநின்னல்லவெல்லாமிசைப்பேனெவ்வுலகினுக்கும்
வித்தேயெனும்புகழ்க்கோடீச்சரசித்தர்வெற்பின்மலர்க்
கொத்தேறியமுடிப்பொற்பேறிடுமென்கொடியிடைமே
வத்தேன்மறுத்திடினீயம்மடலேறளியரசே. (௱௰௬)

தலைவியிளமைத்தன்மைபாங்கி தலைவற்குணர்த்தல்.

மழுத்தடங்கையினர்கோடீச்சுரவெற்பமற்றிவணீ
யெழுத்திசையாதும்முன்சொற்பொருள்கொள்ளாதியாப்பணியின்
விழுத்தகவோதிமுடியாவிப்பேதைகண்மேவுதற்கென்
வழுத்துதிமேன்மைத்தனமிலைக்கூடமதித்திடினே. (௱மஎ)

தலைவன்றலைவிவருத்தியவண்ணமுரைத்தல்.

உம்பர்கள்போற்றிநிங்கோடீச்சுரோசர்தமோங்கவில்வே
ளம்பலரான்மெலிவேனைத்தனைவரும்பாலும்வங்கி
திம்பரலைத்திட்டதாலவ்விளங்கொடியேல்லையுறில்
வம்புசெயத்தக்கதேசிறிதேனுய்வனமுலையே. (௱மஅ)

பாங்கிதலைவிசெவ்வியருமைசெப்பல்.

வழுங்காரணன்பரன்கோடீச்சுரமன்னவஞ்சியென்றே
கழுங்காடிலவெழிற்பந்தாடிலளக்கலியறியேன்
முழுங்கார்கழன்மன்னவாவுன்னகவலக்கண்மொழியத்
தொழுங்கால்விருத்தமுறும்பதமன்றிதுசொல்லுதற்கே. (௱மகூ)

தலைவன்றலைவிசெவ்வியெளிமைசெப்பல்.

பார்கேட்டகீர்த்தியர்கோடீச்சுரோசர்பனிவரையி
னீர்கேட்டவர்க்கருள்கார்தனைநோக்கினெடிதுவக்கு
மோர்கேட்டுவாங்கியவம்மயிலும்மயிலென்றனியற
பேர்கேட்குமுன்னரனமேகளித்திங்குன்பின்வருமே. (௱உ௰)

பாங்கியென்னைமறைத்தபின்னெளிதெனநகுதல்.

செய்யுந்திரியுந்தகளியுந்தியுமுன்னோர்ந்துதம்மிற்
செய்யுஞ்சுடராய்த்திகழ்வும்பின்றாண்டலுருத்திறமு
மையகண்டென்னையெண்ணுதவளின்பத்தடைவெண்ணினுய்
வையம்புகழ்பரன்கோடீச்சுரவெற்பில்வாய்ப்பிதுவே. (௱உக)

அங்கைபொருதவன்புலம்பல்.

மங்கைநல்லாயெழிற்கோடீச்சுரநம்பர்மால்வரைமேற்
றங்குறுவேண்மலரால்லெறிந்தானதுதண்புனத்தோர்
பைங்கிளிமேற்பட்டொருவியென்னெஞ்சினும்பட்டலைத்த
திங்குனக்கோதினனீங்கையாலெறிந்தீர்ந்தனையே. (௱உஉ)

பாங்கிதலைவனைத்தேற்றல்.

மேலும்பர்போற்றரன்கோடீச்சுரவெற்பின்மேவுகைவிற்
காலுறுகற்கடகச்சிங்கமேய்ந்தக்கன்னியுன்றன்

பாலுறச்செய்வேளிராசியமாகப்பருவரல்போக்
கேலும்வகைசூழ்யன்றன்மூடியாததென்னித்தலத்தே. (௱உ௩)

பாங்கிகையுறையேற்றல்.

நாதாந்தமேவரன்கோடீச்சுரவெற்பினண்ணுமெங்கள்
போதார்குழலிக்குன்கையுறையோதினன்போவிங்கென்ன
வாதாவென்றுளினிப்போதுமென்றேயிங்குவந்தனனையா
னீதாவுலகுக்குத்தாதாவெனச்சொன்னெடுந்தகையே. (௱உ௪)

தலைமகனுற்றல்.

பொன்மாலையின்புகழ்கோடீச்சுரநம்பர்போற்றிசெழு
சொன்மாலையன்புறக்கொள்ளுதல்போலிந்தத்தோகைமணி
மின்மாலையன்னளுக்கேற்றனண்மீதுமெலிவுதரு
வன்மாலையன்னதையாற்றிடுமாலையைமாற்றுவளே. (௱உ௫)

பாங்கியிறைவிக்கவன்குறையுணர்த்தல்.

சித்திரபானுசுபானுமதியெனுஞ்சீர்நயனர்
சித்திரமாநகர்க்கோடீச்சுரவெற்பிற்றேர்ந்நயன்செய்
சித்திரமேயோர்சுகங்காண்கிலனுந்திகழொருவன்
சித்திரமாந்தழைகைவாடவாடித்திரிந்திடுமே. (௱உ௬)

தலைவியறியாள்போன்றுகுறியாள்கூறல்.

மன்றிடையாடல்செய்கோடீச்சுரேசர்மனத்தருள்கொண்
டன்றுறுபத்திரயோகிக்கறந்தவமாமெவையு
மொன்றுருகோடியதாமித்தலத்திலுறைந்திடிங்கே
யென்றுரைத்தாரவணவ்வாறிருந்தனனேந்திழையே. (௱உ௭)

பாங்கியிறையோற்கண்டமைபகர்தல்.

சைவாகமஞ்சொன்னகோடீச்சுரேசர்நடத்துநம்பா
லவ்வாரணமுக்கலையுமுறையுடனன்றுகந்து
செவ்வாவினுயவரின்றேதுகேட்குந்திறத்தினரோ
மைவாழ்பொழிலிடைவந்துநிற்கின்றனர்வானுதலே. (௱உ௮)

தலைவிபாங்கியைமறைத்தல்.

விழியுறுபாலத்தர்கோடீச்சுரநம்பர்வெற்பணங்கே
வழிநடப்போரவ்வழிகேட்பர்தாமங்குவந்தவகை

மொழிவரிவைமற்றெனைக்குறித்தோவொன்றுமுன்னலைநீ.
பழிதருமோநங்குலத்தினுக்கீதென்பகர்ந்தனையே. (௱௨௯)

பாங்கியென்னைமறைப்பதென்னெனத்தழாஅல்.

ஏறூர்கொடியரன்கோடீச்சுரமன்னவேந்திழைமெய்
வேறுவியொன்றுவிருந்தேமிருவருமேலதுவு
மாறுகவெண்ணியின்றென்னேபுராணவசனம்விட்டுத்
தேறுமறைகூறுதிநமக்கீதுசிறந்ததன்றே. (௱௩௰)

பாங்கிகையுறைபுகழ்தல்.

மறியுறுகையரன்கோடீச்சுரவெற்பின்மன்னர்தந்த
மூறியிதுன்காதிற்கணிகுழையாம்பின்னுமொய்குழற்கு
நறியதுவாய்மேவலங்கலுமாங்கைக்கொணற்கிளையாஞ்
சிறியமருங்கினுக்காடையுமாமிசைத்தேமொழியே. (௱௩௧)

தோழிகிழவோன்றுயர்நிலைகிளத்தல்.

மறவினைதீர்த்தருள்கோடீச்சுரேசர்வரையில்வெயி
லுறவினைவுற்றிடுபேடையைத்தன்சிறையூடணைத்த
புறவினைநோக்கியகவினைதீர்ந்தப்புரவலர்நீ
ணறவினைமேவலர்க்கோதைநின்றூர்சொன்னவிவடைந்தே. (௱௩௨)

பாங்கிமறுத்தற்கருமைகூறல்.

தையனல்லாய்சிவன்கோடீச்சுரவெற்பர்சார்ந்துதினங்
கொய்யுந்தழைதந்தக்காவுமெலிந்ததுகொய்தவர்தங்
கையுமெலிந்ததவர்க்கிசைவாம்பதங்கட்டுரைத்தென்
பொய்யுமெலிந்ததுநானுமெலிந்துன்கட்போந்தனனே. (௱௩௩)

பாங்கிதலைவன்குறிப்புவேறாகநெறிப்படக்கூறல்

சேய்தந்தநாட்டத்தர்கோடீச்சுரநித்தர்திண்சிலம்பிற்
காய்தந்திடும்பனைமீதேறினல்லகனிதருமென்
றாய்தந்தகோற்றொடியாங்கிசைத்தாரன்பரன்னவர்தம்
வாய்தந்தசொல்லீதறியேனவர்தமனக்கருத்தே. (௱௩௪)

பாங்கிதலைவியைமுனிதல்.

மின்னேயசெஞ்சடைக்கோடீச்சுரவள்ளல்வெற்புறநம்
முன்னேயந்தன்னைக்குறித்துரைத்தேனிம்மொழியனமே
பின்னேயதுசென்றதோர்ந்திலனீயென்பிழைபொறுத்தி
டுன்னேயமாதருக்கோதிடுநீடுன்னுளக்கருத்தே. (௱௩௫)

தலைவிபாங்கியைமுனிதல்.

அணைத்துக்கிசையநடக்குமின்னேயின்றளியனுன்றன்
மணத்துக்கிசையநடந்திடவோவுண்மறுவறுநம்
மிணத்துக்கிசையநடந்திடவோசொல்லினத்துக்கெணுக்
கணத்துக்கிசைகண்டர்கோடீச்சுரேசர்கதிர்வரைக்கே. (௱௩௬)

தலைவிபாங்கிகையுறையேற்றல்.

ஓணத்தவன்போற்றவிட்டத்தன்கேட்டையுறுமடியார்
காணத்தகுபரன்கோடீச்சுரமன்னகாரிகைநா
ஞணத்தகுவதெனினுமதேனின்சொனல்லதிது
பூணத்தகுவதென்றுய்தருவாய்நின்கைப்பூந்தழையே. (௱௩௭)

தலைவிகையுறையேற்றமைபாங்கிதலைவற்குணர்த்தல்.

தன்னொத்திடுசிவன்கோடீச்சுரவெற்பசார்ந்தளித்தேன்
முன்னொற்றியூர்வரிநாட்டத்திலோங்குமுழுதுகுன்றமா
மென்னுந்தனத்தணைத்தொண்முல்லைவாய்முத்தமீந்தனள்பின்
மன்னத்தகையமயிலையொப்பாளுநன்றன்மாந்தழைக்கே. (௱௩௮)

பாங்கிதலைமகற்குக்குறியிடங்கூறல்.

ஆலியிலம்பலத்தாடிநல்லாவணியார்கொடியான்
காணியல்கொன்றையன்கோடீச்சுரமன்னகார்வரைக்கண்
வானியல்காவொன்றதிலேசுகமுன்மருஉமதுவே
தேனியல்கோதைவிளையாடிடமுந்திவாவதிலே. (௱௩௯)

பாங்கிகுறியிடத்திறைவியைக்கொண்டுசேறல்.

அலைகொளுமாவினின்மெய்ம்மணங்கூடுறவாடிவெம்மூ
விலைகொளுஞ்சூலத்தர்கோடீச்சுரேசரிமையமென்னு
மலைகொளமென்சொற்பயிற்றிமற்றீண்டுவரவருதி
சிலைகொளும்வாளிநிகர்விழிவாணுதற்சிற்றிடையே. (௱௪௰)

குறியிடத்துய்த்துநீங்கல்.

சேவலர்கேதனர்கோடீச்சுரவெற்பிற்சேரவுறு
காவலர்தம்மைநின்றிங்குநின்கைக்கொள்கயத்தொண்கஞ்சப்
பூவலர்நீலமெலாமங்குநான்றனிப்போய்க்கொணர்கே
னேவலரின்றிமதனேங்கச்செய்குவமேந்திழையே. (௱௪௧)

இறையோன்குறியிடத்தெதிர்ப்படுதல்.

திறமாரிவ்வேலிவிற்கோடீச்சுரேசர்சிலம்பிலென்மேன்
மறமாரிகல்செய்மதன்றனையோட்டிமருவெனக்குன்
னிறமார்மணிமுடிவேய்ந்தரசீந்திடநீடுகினோங்
குறமாதுநீயிவண்காணேவவந்ததின்றேங்கருளே. (௱௬௨)

புணர்ச்சியின்மகிழ்தல்.

மீனந்தநோக்கிமுன்னுமெய்தகத்துயர்வெப்பகல
வானந்தபேவிமணவாசகத்துமதிப்பரிதாய்த்
தேனந்தமார்கொன்றைக்கோடீச்சுரேசர்சிலம்படிகூ
ழானந்தவெள்ளத்திருவோமுழங்கைகலந்தாடுவமே. (௱௬௩)

புகழ்தல்.

நதிவார்சடையரன்கோடீச்சுரவெற்பினல்லதின
மிதுவாகுநானிங்கணைந்துநின்பேரின்பமெய்தலுற்றேன்
மதிவாணுதலாய்பொருந்துமுன்னத்தமருவலன்றித்
திதிவாரயோககரணங்கண்மேலுந்திடமுற்றவே. (௱௬௪)

அத்தம்-கை, அத்தநாள். திதிவாரயோககரணம்-நிலையுற்ற
வன்புறுபுணர்ச்சிலீலைகள்.

தலைவன்றலைவியைவிடுத்தல்.

வாங்கியமேருவிற்கோடீச்சுரசித்தர்மால்வரைநின்
றீங்கியலுற்றெனைக்காத்தனைமேலனமென்னநடந்
தாங்கியன்மஞ்ஞையெனப்போயுனைக்காத்தருகிருக்கும்
பாங்கியர்கூட்டமெனுங்கூட்டிடையுறைபைங்கிளியே. (௱௬௫)

பாங்கிதலைவியைச்சார்ந்துகையுறைகாட்டல்.

திகைகொண்டவான்புகழ்க்கோடீச்சுரசித்தர்திண்சிலம்பிற்
றொகைகொண்டகஞ்சமெற்காணுமுன்கண்ணீர்சொரிகின்றவும்
பகைகொண்டிலவெனமெய்வாடிகின்றவும்பற்றிலன்முன்
னகைகொண்டுநின்றவிதுகொண்டுவந்தனனன்னுதலே. (௱௬௬)

பாங்கிதலைவியைப்பாங்கிற்கூட்டல்.

தீந்தேமலர்ச்சடைக்கோடீச்சுரேசர்சிலம்பினின்று
போந்தேமணம்பெறுமாவியுற்றுடியிப்போதுகொண்டா

யேந்தேரிளமுலையாய்விளையாடற்கினிப்பொழிற்க
ணூந்தேடுமோதர்நமைத்தேடுமுன்னங்குநண்ணுவமே. (௱சுஎ)

பாங்கிதலைவற்கோம்படைசாற்றல்.

சகத்திருத்தேரினர்கோடீச்சுரவெற்பசாற்றுமெங்கள்
சுகத்தின்பொருட்டுற்றுமுன்றசெண்ணேலச்சுகந்துயர
மிகத்தியங்காதெதிர்கண்டோர்க்கிவண்ணவைத்தெவ்வேலையுமுன்
னகத்திடப்பஞ்சரமவைத்தினிக்காத்திடருள்புரிந்தே. (௱சுஅ)

விருந்துவிலக்கல்.

ஆறுறின்மேலுறைகோடீச்சுரரம்பரம்பொன்வெற்பின்
மாறுறுகள்பலவாறுமவ்வாறெல்லைவந்தொளிரும்
காறுறிருந்தின்னல்செந்தேனூறுநற்கனிதருவேன்
றேறுறுணர்மன்னவாகொண்டுறங்குபின்சென்றருளே. (௱சுகூ)

விருந்திறைவிரும்பல்.

சமரவெஞ்சூலத்தர்கோடீச்சுரவெற்பிற்சாற்றுமன்போ
டமரருணவிற்றினேமாவுந்தேனுமளிப்பிணெனிற்
கமலையன்னீரொன்றவப்பலன்மேவிங்ஙன்கண்டலவோ
குமரக்கடவுள்குடிகொண்டனனிக்குறிஞ்சியிலே. (௱எ௰)

கிழத்திமாலையம்பொழுதுசண்டிரங்கல்.

பொருந்தியமால்விடைக்கோடீச்சுரேசர்புகழ்க்கிரிமே
லருந்திறல்வேள்விடுமுல்லைமென்பூஞ்சரமாற்றலளாய்
வருந்திடுவேற்குருகீடுமிச்செவ்வந்திமாலையினைத்
திருந்திழையீண்டுவரவிட்டார்பின்னுஞ்செப்புகவே. (௱எக)

பாங்கிபுலம்பல்.

சேவுற்றுகைப்பவர்கோடீச்சுரேசர்சிலம்பின்மதன்
மாவுற்றதன்னவன்றேருற்றதாங்கவன்வண்கவிகை
மேவுற்றதன்ஞேன்றனைவாவிளாங்கெனவெங்குயிலோ
கூவுற்றதீண்டிளியென்படுமோதனிக்கோற்றொடியே. (௱எஉ)

தலைவனீடத்தலைவிவருந்தல்.

கருமுத்தமாலையன்விண்ணோர்பணிந்துகலந்துவலம்
வருமுத்தமாலையர்கோடீச்சுரேசர்வரையிலன்று

குருமுத்தமாலைபலகொடுத்தார்வந்துகூடியெனக்
கொருமுத்தமாலையிப்போதுதந்தாலுயிருய்குவனே. (௱௫௩)

உத்தமவாலையர்-கொடுத்தார்-கொடுத்தவர்-மாலையாகியவிப்போது
வந்தொருமுத்தங்கொடுத்தால்.

தலைவியைப்பாங்கிகழறல்.

வணந்தருவெய்யோன்முதலவர்போய்ப்போய்வருதல்கண்டு
மணந்தவரீண்டுத்தணந்தனரொன்னவருந்தலென்னீ
பணந்தருபூணினர்கோடீச்சுரசித்தர்பைம்பொன்வெற்பிற்
றணந்தவர்மீண்டுமணந்திடுவார்மென்றளிரியலே. (௱௫௪)

தலைவிமுன்னிலைப்புறமொழிமொழிதல்.

அரியாரணன்முன்னடிமுடிகாண்டற்கரியவர்கா
விரியார்தடங்கரைக்கோடீச்சுரசித்தர்வெற்பிடத்திற்
றெரியாருமுற்றத்தெரிந்தாருமோதிற்றெளிவரல்லாப்
பெரியார்க்குணர்த்தினுரைத்தவையாவும்பிழைபடுமே. (௱௫௫)

தலைவிபாங்கியொடுபகர்தல்.

நாணவொண்ணுகவிற்கோடீச்சுரோசர்நளிர்வரைமேற்
காணவொண்ணுதுநல்லோர்தமைக்காணிற்கலந்திடன்பு
பூணவொண்ணுதன்புபூண்டாற்பிரிவுபொருந்தவொண்ணு
தேணவொண்ணுதப்பிரிவுறினுவிபின்னேந்திழையே. (௱௫௬)

தலைவியைப்பாங்கியச்சுறுத்தல்.

சேவையுகைப்பவர்கோடீச்சுரோசர்சிலம்பிலொரு
கோவையகம்வைத்துலாப்புறங்காட்டுகிகூறிதனுட்
பாவைநினைக்குரலெல்லாஞ்சுகங்கொடுபாறினவா
லேவைநிகர்விழியாயினிகாப்புனக்கில்லிடமே. (௱௫௭)

நீங்கற்கருமைதலைவிநினைந்திரங்கல்.

நல்லார்புகழ்சிவன்கோடீச்சுரவெற்பினுன்முகனவ்
வில்லாருடனமக்காவியொன்ருகமெய்வேறுசெய்தச்
சொல்லாருமெய்களுமாண்பெண்ணெனச்செய்துதோற்றவருட்
கல்லாகநம்முண்மலராகச்செய்ததென்கற்பனையே. (௱௫௮)

தலைவிக்கவன்வரல்பாங்கிசாற்றல்.

தாதாடுகொன்றையர்கோடீச்சுரோசர்சயிலமலர்க்
கோதாயுன்னன்பர்தங்தேரோசைகேளினிக்கூறுவதென்

போதாந்தன்கணையாருயிராந்தென்றல்புத்தமுதின்
மீதாமதிக்கதிருன்றனக்கோதிவ்வியனிலத்தே. (௱௫௯)

பாங்கிதலைவற்குச்சிறைப்புறமாகச்செறிப்பறிவுறுத்தல்.

தனத்தத்தைமானுக்குதவுகோடீச்சுரத்தானுவெற்பி
னினத்தத்தைகாளக்கணியார்மலர்வாயினுலமர்க்கித்
தினத்தத்தையார்தினைகொய்கெனவோதினர்சேர்ந்தவரிப்
புனத்தத்தையாற்றுவர்யாம்போதுநீர்சுகம்பூண்டிருமே. (௱௬௰)

முன்னிலைப்புறமொழிமொழிந்தறிவுறுத்தல்.

சிறந்தார்புகழ்சிவன்கோடீச்சுரவெற்பர்சென்றக்கெம்மை
மறந்தாலுநீவிர்மறவாதிருமின்மறக்கின்வரி
நிறந்தாங்கியவண்டுகாளளியாளொனுநீடுபெயர்
திறந்தானுறுதிங்குநாங்கள்செல்வோந்தினைசென்மனைக்கே. (௱௬௧)

பாங்கிமுன்னின்றிற்செறிப்புணர்த்தல்.

நிறந்தருவேங்கைதென்கோடீச்சுரசித்தர்நேரியின்வாய்
திறந்ததுநோக்கியெமரீங்கடைந்துதினைகொய்தெம்மை
மறந்தருமிங்ஙன்வைக்கொண்ணுதெனக்கொண்டுமென்னவெங்க
ளறந்தருமில்லில்வைக்கின்றனர்போதுமவர்வழியே. (௱௬௨)

பாங்கிமுன்னின்றுணர்த்தியோம்படைசாற்றல்.

எங்கேதமன்பரிருக்கினுமாங்குற்றிசைக்குமவர்
வெங்கேதந்தீர்த்தருள்கோடீச்சுரேசர்வியன்சிலம்ப
விங்கேதங்காமற்றினைக்கதிரோடில்லமெய்துதும்யா
மங்கேதமங்கர்சூழ்ந்தலைக்காக்கவணைந்தருளே. (௱௬௩)

தலைவன்றஞ்சம்பெறுதுநெஞ்சொடுகிளத்தல்.

நீளாசுகச்செயுங்கோடீச்சுரநம்பர்நேரிநல்லார்
கேளாசுகவெள்ளத்துற்றழைத்தேகக்கிளர்மனைப்போய்
வாளாசுகமுறவைகுவராண்டிங்குவந்தமர்செய்
வேளாசுகத்தைநெஞ்சேயினியாவர்விலக்குவரோ. (௱௬௪)

இறைவனைப்பாங்கிகுறிவரல்விலக்கல்.

பொன்போலுமெய்யினர்கோடீச்சுரேசர்புகழ்வனைக்கண்
முன்போலடிக்கடிவாரல்வெற்பாவிம்முதிர்புனத்தி
லன்போடிளங்கன்றிடைப்புனிற்றுவெனவன்னையொளிர்
மின்போனுடங்கிடைதன்பால்வருமெந்தவேலையுமே. (௱௬௫)

இறைவியைப்பாங்கிகுறிவரல்விலக்கல்.

உலகந்தருசிவன்கோடீச்சுரமன்னவொண்ணுதலுன்
றிலகமுங்கூந்தலம்போதுமெய்ச்செவ்வியுஞ்சேரக்கண்டு
நலகங்கறுத்துநகைத்துயிர்த்தேகினணம்மனையின்
றிலகந்தருமிவ்விடமவ்விடமாமினிநமக்கே. (௱௬௬)

தலைவிபாடிடநோக்கியழிதல்.

மறக்கதிர்ச்சூலத்தர்கோடீச்சுரேசர்வரைநெருநற்
றிறக்கிள்ளைகள்புனம்வாராதகற்றினஞ்சேரவின்று
நிறக்கிளர்பூஞ்சுனைதன்னொடிச்சோலைநிழலும்விட்டுப்
பறக்கின்றனஞ்சிறைகொண்டுங்கத்தீங்குபலித்திட்டதே. (௱௬௭)

பாங்கியாடிடம்விடுத்துக்கொண்டகறல்.

இழைநோக்குமார்பரன்கோடீச்சுரவெற்பில்யாமிழைத்த
பிழைநோக்கிடாதெழிற்பைங்கிளிகாளெம்பிரிவுவந்தும்
முழைநோக்கிறைக்கிசைத்தூரோதியூர்வழியூரவர்கண்
மழைநோக்கியேகுமெனவுண்மையோதிவரவிடுமே. (௱௬௮)

இறைவன்குறிவயிற்சென்றிரங்கல்.

குழையார்செவியினர்கோடீச்சுரேசர்குவட்டிடையவ்
வுழையார்விழியனைக்காண்கிலமூர்வழியோர்ந்திலநந்
தழையார்வங்கொண்டங்ககன்றாரிருந்தனந்தன்னின்மன்னோ
ரிழையாயிருந்தனமென்றுலவருடனேகுவமே. (௱௬௯)

வறுங்களநாடிமறுகல்.

மந்தாகினிச்சடைக்கோடீச்சுரேசர்வரைத்திருமான்
வந்தார்வத்தோடம்மனையாடுமோகைவளையொலிக்கப்
பந்தாடுமோசுகம்புள்ளினங்காளிந்தப்பைம்பொழிற்கட்
டந்தாளுமோவொருகாலமுன்போலத்தமியனையே. (௱௭௰)

வாழுமூர்நோக்கிமதிமயங்கல்.

பெருவிண்ணவர்புகழ்கோடீச்சுரேசர்பிறங்கலினந்
திருவின்புறுமூரஃததுசீறூரதிற்செறிவோ
ரிருவின்மறவர்நளன்போலநாமுமவ்விந்திரன்பா
லொருவிஞ்சைபெற்றிடிற்போய்வரலாமந்தவூர்தனக்கே. (௱௭௧)

இறையோனிருட்குறிவேண்டல்.

வணந்தங்குவார்சடைக்கோடீச்சுரேசர்மணிவரைவண்
டினந்தங்குகோதைநின்சீறூரிடத்தின்றிரவுதனிற்

கணந்தங்குகாவின்முனைநாளெனக்கிருகைக்கிறையத்
தணந்தந்தவர்தம்மிடைவருவேனினுந்தான்பெறவே. (௱௭௨)

பாங்கிநெறியினதருமைகூறல்.

நெடுங்கயிலாயத்தர்கோடீச்சுரத்தர்நேரியின்பாற்
கொடுங்குன்றுநீடுவளராணைக்காவுங்குறிப்பின்மனை
நடுங்குமிகுபுனற்கொள்ளிடவாறுமிந்நாளிரவி
லடுங்கதிர்வேலகடந்தீண்டணைதலருமையதே. (௱௭௩)

தலைவனெறியினதெளிமைகூறல்.

ஒளியார்செம்மேனியர்கோடீச்சுரேசருயர்வரைமேற்
றெளியாரமுதந்தருகாரிகைமுகத்திங்களொரு
வெளியாயுறும்போதிருளெனக்கேதன்றிமேலுமந்தக்
களியார்மயின்முற்பணிதோன்றலேதுகணங்குழையே. (௱௭௪)

பாங்கியவணாட்டணியியல்வினாதல்.

நீடும்புகழரன்கோடீச்சுரவெற்பநேருணது
நாடுமந்நாட்டுநறுநுதற்பாவையர்நாளுமினி
தாடுமமுதத்தின்சீருந்தளைசெய்தணிதொடையும்
பாடுமப்பாவும்பயிலுமினமும்பணித்தருளே. (௱௭௫)

தலைவனவணாட்டணியியல்வினாதல்.

என்னாட்டணிநோக்கிடநீவருங்காலியம்புவன்முன்
னின்னாட்டியலிசைநாடகமாடுநீயெனக்குப்
பொன்னாட்டினர்பணிகோடீச்சுரநம்பர்பொற்கிரிமேல்
வன்னாட்டியதன்னகொங்கைமின்னேரிடைவாணுதலே. (௱௭௬)

தன்னாட்டணியியல்பாங்கிசாற்றல்.

மாதாரமார்பங்கர்கோடீச்சுரேசர்வரையிடமே
யாதாரமாகவிருந்தாடுவார்மயிலாடுதுறை
காதாரம்பாமெனுங்கண்ணார்மகளிர்தென்காஞ்சியொடு
கேதாரம்பாடுவரெங்கள்பொன்னாட்டினுங்கேளரசே (௱௭௭)

பாங்கியிறைவிக்கிறையோன்குறையறிவுறுத்தல்

வெவ்வாண்மழுப்படைக்கோடீச்சுரவள்ளல்வெற்பின்வரி
கவ்வாணம்பாடுங்குழலாய்மதியின்கலையமுதை

யவ்வாதரங்கொள்சகோரமுண்காலத்தரசருண்பாற்
செவ்வாய்க்கிழமையமுதுக்குத்தாம்வரல்செப்பினரோ. (௱எஅ)

நேராதிறைவிநெஞ்சொடுகிளத்தல்.

தோட்டுவிற்காதரன்கோடீச்சுரவெற்பிற்றேன்றியசெங்
கோட்டுயர்வேழத்தெதிர்நமைக்காத்தவர்கூடிவரி
பாட்டுளர்கானத்திராவரச்செய்தனள்பம்பரத்தை
யாட்டுவிக்குந்தனத்தாணெஞ்சமேயின்னதாய்நிலனே. (௱எகூ)

தலைவிபாங்கியோடுநேர்ந்துரைத்தல்.

மூன்றுணமக்குயிராவியிலீந்தமுதல்வர்வந்திங்
கென்றுருயிர்காத்திடுதியென்றுலதற்கென்செயலாம்
வின்றுண்பணிகொண்டகோடீச்சுரவள்ளல்வெற்பிடத்தி
லுன்றுவகத்திற்கிசைந்ததைநீயேயுரையணங்கே. (௱அ௰)

நேர்ந்தமைபாங்கிநெடுந்தகைக்குரைத்தல்.

திசையுலவும்புகழ்க்கோடீச்சுரநம்பர்திண்சிலம்பிற்
றகையுறுமாதுளமென்காய்தனைப்பகர்தந்திரந்தா
னகையுறுவேலமெலக்கனியாக்கினனன்பணிந்து
தொகையிதுவாமேல்வகையும்விரியுந்தொடர்ந்துணரே. (௱அக)

குறியிடைநிறீஇத்தாய்துயிலறிதல்

இலங்கையிற்காவையனுமானலைத்ததெனத்திருக்கை
யிலங்கையிற்குலத்தர்கோடீச்சுரேசரிமையவெற்பி
னிலங்கையினீள்விழிமானேநஞ்சோலையையீடழித்த
திலங்கையிற்போகவுஞ்செய்திட்டதானையொன்றின்றுவந்தே. (௱அஉ)

இறைவிக்கிறைவன்வரவறிவுறுத்தல்.

முடிவனைகொன்றையர்கோடீச்சுரேசர்முருகுவெற்பி
னடிவளரோணற்புனத்தேபகல்வந்தவம்மதமா
கொடிவளர்காவினிடைவந்துதன்னொடுகூடவந்த
பிடிவரனேக்கிநிற்கின்றதுவானுதற்பெண்ணரசே. (௱அ௩)

குறியிடத்திறைவியைக்கொண்டுசேறல்.

ஆடகவில்லினர்கோடீச்சுரேசருண்மருவிச்
சூடகக்காந்தளஞ்செங்கைமின்னேமுகில்சூழ்பொழில்கு

ழேடகமார்திருப்பூவணம்பார்த்திறைகூடலுங்கண்
டடகமேவுதிவாராய்சிவந்சியின்னதிலே. (௱௮௪)

குறியிடத்துய்த்துநீங்கல்.

பணங்கொண்டபூணினர்கோடீச்சுரமன்னபாவையிருள்
வணங்கொண்டகோதைக்கணிசெயநான்மென்மலர்பறித்துக்
கணங்கொண்டணைவலிக்காவகத்தேநில்கருதிடுநன்
மணங்கொண்டிலாவுறுதென்றலுன்மேனிமருவுறவே. (௱௮௫)

தலைவனேதிர்ப்படுதல்.

ஊர்திறலேற்றனர்கோடீச்சரவெற்பிலோதுவரி
நேர்திறம்பாடுமைக்கோதைநல்லாயிங்கிசியில்வெய்யோன்
சீர்திறம்பாத்தன்கரத்தாலடைத்திட்டதிண்மனையங்
கார்திறந்தார்வந்தெவ்வாறுவந்தாய்தனியாருயிரோ. (௱௮௬)

தலைவியாற்றினதருமைநினைந்திரங்கல்.

வில்லரிமேருவெனமேல்வளைத்தவர்வில்வநறு
வல்லரிசூடியகோடீச்சுரோசர்வரைக்குறவர்
கொல்லரிகுத்தெனச்சூழ்ந்திடுங்கானிடைக்கொற்றவநீ
யல்லரிவேழம்பிழைத்தீண்டணைந்ததருமையதே. (௱௮௭)

தலைவன்றேற்றல்.

சினத்திரிசூலத்தர்கோடீச்சுரோசர்திருப்பதமென்
மனத்துறலாலெதிர்தோன்றுமடங்கன்மடங்கியது
வனத்திற்கரியுங்கரிந்ததுநீங்கின்றிவந்தனன்யா
னினத்திகழ்பொற்றொடிக்கையாயொளிமுன்னிருளில்லையே. (௱௮௮)

புணர்தல்.

தெள்ளக்கலைச்சடைக்கோடீச்சுரோசர்சிலம்பினடையென்
னுள்ளக்கமலத்துறைதிருவேயிவ்வுலகஞ்சுற்றும்
வெள்ளக்கடற்குக்கரையுண்டளவுண்டுமேவுமிந்தக்
கள்ளக்களிப்பெருங்காமக்கடற்கரைகண்டிலனே. (௱௮௯)

புகழ்தல்.

வெண்பொடிப்பூசத்தராதிரையார்மகமேலழித்தோர்
வெண்புணரத்தத்தர்கோடீச்சுரத்திந்தப்பெண்ணிகர்யா

ரொண்பயிணுகமடந்தையர்தாழ்ந்தவரோத்திமையோர்
நண்புறுமாதர்களந்தரத்தோர்மண்ணினண்ணிலரோ. (௱௬0)

இறைவியிறைவனைக்குறிவரல்விலக்கல்.

உள்ளன்புணர்ந்தருள்கோடீச்சுரேசர்தமோங்கலன்ப
கள்ளம்பெரிதுகராம்பெரிதாற்றிற்கவலைநெறி
வள்ளம்புதூர்ப்பர்வனசரர்நீதனிவாரல்வரு
வெள்ளங்கிணற்றுப்புனல்கொண்டுபோதலின்மேதினிக்கே. (௱௬௧)

தலைவன்றலைவியையில்வயின்விடுத்தல்.

எனையாளவந்ததிருவேதனிநில்லலேதில்வண்டர்
பனையார்கள்ருண்டுகளித்துத்திரியுமிப்பைம்பொழிற்கண்
வனையாறுறுசடைக்கோடீச்சுரவள்ளல்வண்சிலம்பி
லனையாங்குநின்றனைத்தேடுமுன்னேகிடலர்மனைக்கே. (௱௬௨)

பாங்கிதலைவியையெய்திக்கையுறைகாட்டல்.

சலந்தரற்காய்ந்தவர்கோடீச்சுரேசர்தடஞ்சிலம்பின்
வலந்தருவேல்விழிமானேதளவமலர்கொணர்ந்தே
னலர்தருமீதுன்னகையெழிலேனுக்கிமுன்னுணமுற்று
மலர்ந்திடல்போலுள்ளுடைந்தாங்குநின்றதுவாய்திறந்தே. (௱௬௩)

பாங்கிதலைமகளையிற்கொண்டேகல்.

தாய்துயினீங்கினென்றுமெங்கெனுமதுதானுமன்றி
வாய்துணைவாரியடைப்பினுங்கூவிடவாயிலைநம்
மேய்துதிகொண்டருள்கோடீச்சுரேசரிமையவெற்பி
லாய்துடிநேரிடையாயொல்லைவாபின்னகந்தனக்கே. (௱௬௪)

பாங்கியிறைவனைவரவுவிலக்கல்.

மாயாவினேதர்தென்கோடீச்சுரேசர்வரையிறைவ
சாயாவனமுங்கழிப்பாலையுந்தள்ளிச்சாரினுமித்
தீயார்குறிஞ்சியிற்சாரவொண்ணாதுதெரிக்குமிவை
யாயாதிரவில்வரினீயெனக்காமரும்பழியே. (௱௬௫)

தலைமகன்மயங்கல்.

காவென்றுரைக்குமுன்வாவென்றழைத்துக்கதியருளுந்
தேவென்றுரைசிவன்கோடீச்சுரவள்ளல்செஞ்சிலம்பிற்
போவென்பதேபுகலின்னுளொருபுயல்போற்றதன்மேற்
றூவெண்மதிக்கதிரன்னாள்சுகநாஞ்சகோரமதே. (௱௬௬)

தோழிதலைமகடுயர்கிளந்துவிடுத்தல்.

அரவிண்டயீசர்தென்கோடீச்சுரவெற்பவண்ணுறுமிவ்
விரவிடைவிண்ணொலிகேளாமகிழ்மயிலென்னவெம்மா
ளிரலருங்கான்கடந்துன்னூரணைந்தபின்னீகுறிக்கு
மிரலைதன்வாயொலிகேட்டபின்றான்களிப்பெய்துவதே. (௱௯௭)

திருமகட்புணர்ந்தவன்சேறல்.

பொன்னுறழ்மெய்யரன்கோடீச்சுரமன்னபூங்கொடித
னுன்னுமிடையல்குலாநநேரொமையோதுகென
மின்னுமரவுமதியுமங்கங்குவெளியுறவென்
முன்னுறவெய்திநெறிகாட்டநான்செல்வன்மொய்குழலே. (௱௯௮)

இறைவிக்கிகுளையிறைவரவுணர்த்தல்.

இலகம்புனைசடைக்கோடீச்சுரவள்ளலேமவெற்பிற்
கலகம்புரிவடிவேல்விழியாய்நந்தங்காவினிடை
யுலகம்புரக்குமூன்மேகம்வந்தெய்தியதோதலுறு
நலகம்பலைசெவிக்கேட்கலுற்றேனிங்கண்ணலுற்றே. (௱௯௯)

தான்குறிமருண்டமைதலைவியவட்குரைத்தல்.

வெள்ளங்கொள்வேணியர்கோடீச்சுரவன்பர்மேவுறச்செய்
கள்ளங்கொளோதையெனவேற்றொலியினைக்காவடைந்தேன்
கிள்ளையினங்கள்சுகமாயிருந்தனகேககயமொன்
னுள்ளமருளமுற்றேர்கையதாயங்குறைவுற்றதே. (௨௱)

பாங்கிதலைவன்றீங்கெடுத்தியம்பல்.

கார்மேவியகண்டர்கோடீச்சுரவன்பர்காவினிடை
வார்மேவியகொங்கைநீபோயடிக்கடிமாழ்கிவர
நீர்மேலெழுதிவைத்தேகினராகுகினைகுறியை
யார்மேலறியவல்லாரவர்மாயமுமார்வமுமே. (௨௱௧)

தலைவன்புலந்துபோதல்.

மின்செயுஞ்சூலத்தர்கோடீச்சுரநம்பர்வெற்பிலினி
யென்செய்வமென்னவிரங்குநெஞ்சேயிவ்விடையிரவிற்
றென்செயம்போருகச்செந்தேனமக்குத்தெரிவுறுமோ
நின்செய்கையாலுமலைத்தேனலைத்தாய்நெடிதெனையே. (௨௱௨)

புலர்ந்தபின்றலைவிவறுங்களங்கண்டிரங்கல்.

பொன்னாகமால்புகழ்கோடீச்சுரேசர்புகார்த்துறைவாய்ப்
புன்னாகமேவியபுள்ளினங்காளன்பர்புல்லிரவின்
முன்னாகவிங்குற்றனரோவெனக்குமொழிமினின்றிப்
பின்னாகமேவில்வர்க்குனைப்பிரிவொன்பெருந்துயரோ. (உ௱௩)

தலைவிபாங்கிக்குரைத்தல்.

நெய்யார்மழுவினர்கோடீச்சுரவெற்பர்நென்னல்வரை
பொய்யாரெனப்பொருண்மாறுகொண்டேனவர்போற்றிடுமின்
றுய்யானமெய்துவனென்றுசொன்மாறுரைத்துற்றவப்பேர்
மெய்யாயுடன்படச்செய்துகொண்டார்மதிமெல்லியலே. (உ௱௪)

தலைமகளவலம்பாங்கிதணித்தல்.

தகரக்குழல்பங்கர்கோடீச்சுரநம்பர்சய்யநெடுஞ்
சிகரத்துதித்தநதியின்பின்னேகியதேமலரா
வகரமுன்மேவுங்குளத்திடைநோக்கினன்வண்பொழிற்கட்
பகரணியார்முலைமாதேதவிர்நின்பருவரலே. (உ௱௫)

சிகரத்துதித்துவருகின்றநதி-காவிரி-இதிற்பின்னேகியது-காவி.
வகரமுன் மேவுகுளம்,வகுளம்-அதுமகிழமரம்.

இறைவன்மேற்பாங்கிகுறிபிழைப்பேற்றல்.

தாரார்கடுக்கையர்கோடீச்சுரேசர்தடஞ்சிலம்பிற்
கூரார்மணிவேற்கரத்தீர்நெருநற்குறியிடத்து
வாராதிருந்தீருமதூர்க்குநாங்கள்வரக்குறித்தே
மூரார்பெயருநும்பேரும்விள்ளாமையினுற்றிலமே. (உ௱௬)

இறைவிமேலிறைவன்குறிபிழைப்பேற்றல்.

என்னைமுன்னாண்டருள்கோடீச்சுரவள்ளலேமவெற்பின்
மின்னையன்னாள்வடிவென்றுங்குயிலிசைமேவுமென்சொற்
றன்னையன்னாண்மொழியென்றுமற்றங்கங்குச்சார்ந்திட்டுங்கள்
பொன்னையிரும்பொழிற்காண்கிலனூர்சென்றுபோந்தனனே. (உ௱௭)

தலைவிகுறிமருண்டமைபாங்கிதலைவற்குரைத்தல்.

நீலுண்டகண்டத்தர்கோடீச்சுரேசர்நெடுஞ்சிலம்பி
னேலும்புளினஞ்சிலம்பினுந்தாருவிலைழுந்திடினு

மேலுன்குறிவேற்றுமையறியாள்சென்றுமீண்டுபின்போய்க்
காலுஞ்சிவந்திட்டதல்வழிக்காவலகன்னிகைக்கே. (உ௱அ)

அவன்மொழிக்கொடுமைபாங்கியவட்குரைத்தல்.

கங்கைச்சடையினர்கோடீச்சுரேசர்கயிலையிலா
சங்கைக்கிடமிலென்சங்கேதந்தேருந்தகையற்றிந்த
மங்கைப்பருவமுதலாயதுங்கண்மடவார்க்கென்
றங்கைத்தலத்தொளிர்வேலர்சொன்னார்வந்தணியிழையே. (உ௱௯)

என்பிழைப்பன்றென்றிறைவிநோதல்

மறக்குஞ்சரமுரிகோடீச்சுரேசர்வரையளிகள்
பறக்குமிசையுஞ்சருகோடலருதிர்பாட்டியலு
மூறக்குற்றிடாதிருந்தொண்பொழில்வாய்க்கேட்டுரைக்குமவர்
சிறக்குங்குறியென்றலைந்தேனிருளிடைத்தேமொழியே. (உ௱ய)

தாய்துஞ்சாமை.

வணங்கார்புரம்வென்றகோடீச்சுரேசனைவாழ்த்தியினி
திணங்காகுமிந்தப்பிறப்பிடையேபண்ணிசைவரியின்
கணங்காமுறுகருங்கூந்தன்மின்னேயன்னைகண்ணிமையா
தணங்காயினளிரவெல்லாந்தனியேயணங்குறவே. (உ௱யக)

நாய்துஞ்சாமை.

வீயுறங்கும்பொழிற்கோடீச்சுரநம்விமலர்வெற்பிற்
பேயுறங்காதங்கதனுடன்றாய்துயில்பெற்றிடினும்
நாயுறங்காதன்னதன்கணுறங்கினுநாடுமதன்
வாயுறங்காதிவற்றண்ணலெவ்வாறுவருமிரவே. (உ௱யஉ)

ஊர்துஞ்சாமை.

மருக்கொண்டகொன்றையர்கோடீச்சுரேசர்வரையிடத்திற்
குருக்கொண்டவொண்டொடிப்பைங்கிளியேயென்கொடுமையிருட்
கருக்கொண்டுநீடுவிழாவொடுகூத்துக்கதைகளென
வுருக்கொண்டுவந்திந்தவூருறங்காமலுளுற்றியதே. (உ௱யங)

காவலர்கடுகுதல்.

காவலர்போற்றிடுங்கோடீச்சுரேசர்களிர்வரைக்க
ணேவலரான்மதன்றாக்கமெய்வாடுநம்மேந்தலுக்கு
மேவலராகித்துடியடித்தார்த்துவிடிவளவுங்
காவலர்சூழலின்வாராரனிச்சூழலிற்காலனுமே. (உ௱யச)

நிலவுவெளிப்பட வருந்தல்.

கரும்பார்மலர்ச்சடைக்கோடீச்சுரேசர்சுடர்க்கிரிமே
லரும்பாமுலைக்கொடியன்பரொன்பாலவந்தகலளவும்
வரும்பாழ்மதியைப்புதைத்தாங்குவைத்திடவல்லவரார்
கரும்பார்ந்தவொளான்றுளதந்தவெட்டுண்டதைக்கண்டிலனே. (உ௱ம௫)

கூகைகுழறுதல்.

மூரண்டருவேலார்க்கியல்கவ்வரியின்மொழியவரு
மிரண்டுடன்முன்னதற்கஞ்சாருெடொன்பதினாதல்வெண்ணெய்
திரண்டுறுவேலையிற்றுழிச்சிதைவொக்குஞ்செய்ந்நகையா
லரண்டுகளாக்கிறைகோடீச்சுரமன்னவாயிழையே. (உ௱ம௬)

கவ்வரியினிரண்டு-கா-முன்னது-க-காகத்துக்கஞ்சுகின்ற;கூகூ-கூகை.

கோழிகுரற்காட்டுதல்.

வடியோர்கொள்வேலொடுசேய்போலிறைவர்வருதல்கண்டு
கொடியேனிவ்வூரிடையுள்ளேனென்கின்றதுகோழியிந்தப்
படியேயெனக்கிகலாயீங்கிருவெனப்பன்னிச்செல்வார்
துடியேரிடையவர்கோடீச்சுரநம்பர்தூய்வரைக்கே. (உ௱ம௭)

பாங்கிதலைவியைப்பருவரல்வினவுதல்.

மகஞ்செயுமோமப்புகைபோய்விசும்பின்மழைபெய்வித்துச்
சகஞ்சலியாமற்செய்கோடீச்சுரவள்ளல்சாரலிலுன்
னகஞ்சலிப்புற்றதென்னொன்னவோதினரன்னதைசின்
முகஞ்சிறிதோதிற்றுநீசிறிதோதுமுகிழ்முலையே. (உ௱ம௮)

தலைவியருமறைசெவிலியறிந்தமைகூறல்.

கயலையும்வேலையுநேர்விழியீரன்னைகாவுடனே
வயலையுஞ்சூழுநங்கோடீச்சுரநம்பர்மால்வரையென்
செயலையுநீர்கொண்டசேலையுமாகந்திளைத்தெழுந்த
பயலையும்பார்த்தெவனென்றுண்மிகவும்பயந்தனனே. (உ௱ம௯)

நீர்கொண்டசேலை-நீர்துளிக்கின்றசேல்போன்றகண்ணை,பயலை- பசலை.

தலைவிதலைவன்வருந்தொழிற்கருமைசாற்றல்.

கொங்கலர்க்கோதைநங்கோடீச்சுரேசர்குவட்டினிடைத்
திங்களோரம்புலிகோழியோர்வாரணஞ்சேண்பொழிலிற்
றங்குங்குடிஞையோர்கோட்டானிசைத்திடுஞ்சாரிவற்றை
யெங்குக்கடந்தன்பரொவ்வாறணைகுவரிவ்விடத்தே. (உ௱உம)

தலைவிதலைமகனூர்க்குச்செலவொருப்படுதல்.

மேலூர்மதிச்சடைக்கோடீச்சுரவள்ளல்வெற்பனொன்றன்
மாலூர்மனத்தினைக்கொண்டகன்றூரதைவாங்கிவரக்
காலூர்தருகின்றதுசெல்லுவோமெனிற்கண்ணுதல்வாழ்
நாலூரொன்னூரொன்றணங்கேயவர்முன்னவின்றனரோ. (௨௨௧)

பாங்கியிறைவனைப்பழித்தல்.

சீரலர்செங்கையிற்சென்னியுந்தாண்மேற்றெறிக்குமெழி
லோரலர்க்கண்ணுங்கொள்கோடீச்சுரவள்ளலோங்கலினும்
வாரலர்க்கோதைவளவொன்றெண்ணியமன்னரிங்குச்
சேரலரானதிற்கைதவராவர்தெளிவுறினே. (௨௨௨)

இறைவனைத்தலைவியியற்படமொழிதல்.

தாயாயுலகிற்குத்தந்தையுமாயருள்சங்கரர்செவ்
வாயார்மறையினர்கோடீச்சுரமன்னமாதிறைவர்
தீயாரொன்றேறுதிடலோராதவரல்லர்தெண்மதியா
ராயாதிருப்பதெளியேன்றுயமொன்னருவினையே. (௨௨௩)

தலைவிகனவுநலிவுரைத்தல்.

பெண்ணுருபாகத்தர்கோடீச்சுரவெற்பர்பேசிரவி
னண்ணியுரம்பெறுதாளங்கைக்கொண்டுநகைமுகமுற்
றுண்ணயப்பெய்துறவாடிடவாவெனவோதினர்நான்
கண்ணைவிழித்தங்கெழுந்தேனவர்தமைககண்டிலனே. (௨௨௪)

தலைவிகனவழிவுரைத்தல்.

நங்காய்நங்காவலரூரினிலாத்திறநன்கறிந்து
கொங்காரும்வேடன்படைதனியேன்பொற்குவைகளெலா
மிங்காவலினுற்றுச்சூறையிட்டோடிற்றிமையமங்கை
பங்காளரங்கணர்கோடீச்சுரேசர்பனிவரைக்கே. (௨௨௫)

கொங்கு-தாது. வேடன்படை - மதன்கணை.
பொற்குவை - அழகின்குவை.

தன்றுயர்தலைவற்குணர்த்தல்வேண்டல்.

அங்காவியங்கண்ணிகோடீச்சுரவள்ளலன்பர்முன்போ
யெங்காரிகைபொன்னிறமேற்றுமாலாயினளெனவே

யங்காதரத்தினுளாத்தோரொணக்கென்றனுருயிர்ந்
திங்காய்தனக்கொருபெண்ணீந்துயர்புகழேற்பவரோ. (உஉசு)

நின்குறைநீயேசென்றுரையென்றல்.

விளையேயிதழியுமத்தமுஞ்சூழுறுவேணியினர்
பனையேயிடத்தினர்கோடீச்சுரேசர்பணிவளாமேல்
வளையேயெனுங்கொங்கைமின்னேசொன்மூலமறந்தவர்க்கென்
னுளையேறுமோநின்குறையாவுநீயேயுரையெதிர்ந்தே. (உஉஎ)

அலர்பார்த்துற்றவச்சக்கிளவி.

சிவன்றாதனுகிப்பரவைதன்பாலன்பிற்சென்றுவந்த
பவன்றூயசோதிதென்கோடீச்சுரவெற்பிற்பைங்கனழுவில்
லவன்றாற்றலரினுக்கச்சமின்றன்ஞனனிகமின்ஞ
ரிவண்டேற்றலரினுக்கஞ்சினஞறிலனேழையனே. (உஉஅ)

ஆறுபார்த்துற்றவச்சக்கிளவி.

தன்னேரிலாவரன்கோடீச்சுரவெற்பர்சாருநம்பாற்
கன்னேர்மனங்கொண்டிருப்பதுநோக்கியுங்காதலுற்ற
வென்னைநெஞ்சீண்டொருக்கால்வரிற்கானிடையவர்த
முன்னேயெழுந்திக்கரக்காயுருகிடுமொய்குழலே. (உஉகூ)

காமமிக்ககழிபடர்க்கிளவி.

நறியமென்கொன்றையர்கோடீச்சுரநம்பர்கானையிற்சங்
கெறிபெருவெங்கடலேயெனேநீயினைப்திங்கடலே
வெறிமடிமேவிலேயேயன்பரீங்கின்னுமேழிலேயே
மறிதருமாமைக்கணமேசொரியுமென்மைக்கணமே. (உஙய)

தன்னுட்கையாறெய்திடுகிளவி.

நீறணிமேனியர்கோடீச்சுரநம்பர்நேசர்முன்பெய்
கூறல்கைதாயின்றுவம்புற்றலைவாய்க்குருகிழந்து
வீறளியார்களிரங்கக்கண்ணீர்சிந்திமெய்பசந்திவ்
வாறடைந்தென்னையொத்தாய்பிரிந்தார்கொலுன்னன்பருமே. (உஙக)

தலைமகனைறிவிலக்குவித்தல்.

அரவக்கதிர்ச்சடைக்கோடீச்சுரேசரணிவளாவா
மூரவச்சிலம்படியாயன்பரொய்திலணைந்திரப்போ
ரிரவகற்றும்புகழோயகத்தேபொன்னையீட்டிவைத்திங்
கிரவதின்மேவிற்பழிப்பாம்வரல்வணத்தென்றுரையே. (உஙஉ)

தலைவிகுறிவிலக்குவித்தல்,

மின்போலுஞ்சூலத்தர்கோடீச்சுரவெற்பின்வேந்துவரிற்
பொன்போன்மறுதாளிடைக்கதிர்தோன்றினபூம்புனத்தின்
முன்போற்சுகங்கொளுப்போற்றிடப்போமெனமுந்தனையின்
றன்போலொத்தாள்வருவோம்வரலிங்கென்றங்குளாயே. (௨௩௩)

வெறிவிலக்குவித்தல்.

மறிகொண்டகையரன்கோட்டீச்சுரமன்னவாணுதலாய்
நெறிகொண்டமன்னர்தமைத்தொட்டுநானிங்குநீடுகவின்
முறிகொண்டதோர்ந்திலள்பேய்தொட்டதென்றெனைமூண்டனர்பின்
வெறிகொண்டனளதையோர்மருந்தீந்துவிலக்குகவே. (௨௩௪)

பிறர்விலக்குவித்தல்.

சேய்தந்தகண்ணினர்கோடீச்சுரமன்னசேயிழைநந்
தாய்தந்தையர்மணங்கொண்டெய்தளியார்தமக்கங்கென்ன
வாய்தந்திடுவர்கொல்லோவனையாவொண்மனக்கருத்தை
யாய்தந்திடுதற்கிமையோரலர்நீயறிவித்திடே. (௨௩௫)

குரவரைவரைவெதிர்கொள்ளுவித்தல்.

ஆலைக்குளிர்வயற்கோடீச்சுரநம்பரம்பொன்வெற்பிற்
சோலைக்குயின்மொழியாயன்பர்மன்றலந்தூதுவரின்
மாலைக்குழலனையாதியராங்குமருதிவரோ
பாலைக்குரியவொன்றேறுதிடென்முல்லைபடர்ந்திடவே. (௨௩௬)

வினவியசெவிலிக்குமறைத்தமைவிளம்பல்.

நன்னித்திலநகைவாட்டங்கண்டாங்கெனைநண்ணிடனை
கன்னிக்கடுத்ததென்னென்றுள்பெருந்தகைக்காவலநா
னன்னதுலாம்புகழ்ச்சிங்கமுன்கண்ணுற்றதாகுமென்றே
னுன்னற்கரியவர்கோடீச்சுரேசருயர்வரைக்கே. (௨௩௭)

அலரறிவுறுத்தல்.

அடியார்க்கெளியவர்கோடீச்சுரேசரணிவரையின்
முடியார்மலர்க்கொம்பர்மேலுற்றிசின்னளிமுன்னலுறு
கடியாரிவ்வூரிலெமையறியாமற்கணியுறுபூங்
கொடியாரிடந்தொறும்போயலருண்டதுகொற்றவனே. (௨௩௮)

தாயறிவுறுத்தல்.

தவளப்பொன்னீற்றரன்கோடீச்சுரவெற்பதையலின்வாய்ப்
பவளம்விளர்ப்புறச்சேப்புறநீலமென்பார்வைகண்மெய்
துவளத்திகழுற்றதுகண்டனைசினந்தோன்றநின்று
ளவளக்களவறிந்தாளங்குநீவந்தகன்றபின்னே. (௨௩௯)

வெறியச்சுறுத்தல்.

பெருமையுறுபுகழ்கோடீச்சுரேசர்பிறங்கலன்ப
வருமையுறத்தனிப்போற்றிவளர்த்திட்டவன்னையின்று
கருமையுறுங்கண்ணிணைமெலிவுற்றதுகண்டுடனே
யொருமைகொண்டுற்றதிரண்டுபங்காக்கிடவுள்ளினளே. (௨௪௰)

பிறர்வரைவுணர்த்தல்.

நின்னூர்தனக்கன்றுநீபோனபின்புநெரிவளைத்தின்
மன்னூரமுத்தமிழ்க்கோடீச்சுரநம்பர்மால்வரைமேற்
பொன்னூர்வரைதனிற்கொண்டெமர்பாலிப்புலவொலா
நன்னூலிடையெழிற்காரிகைகேட்கநணுகினரோ. (௨௪௧)

வரைவெதிர்வுணர்த்தல்.

எட்டார்வடிவத்தர்கோடீச்சுரேசொழில்வரையிற்
கட்டாரணியுமெமருனைக்காணிற்களிப்பினொடு
கட்டார்களாவரதன்பின்னர்நீயென்னவின்றிடினுந்
தட்டாரப்பெண்ணைத்தருவாருனக்குத்தராதிபனே. (௨௪௨)

வரையுநாளுணர்த்தல்.

கணியார்மணமலர்மாலைதந்தார்தண்கதிரவனல்
லணியார்த்ருகலையாவுங்கொண்டூருற்றனனரவப்
பணியார்சடையெழிற்கோடீச்சுரேசர்பணிவரைக்கண்
மணியார்செவ்வேலவமன்றல்செய்காலமருவிதுவே. (௨௪௩)

மலர்மாலை-ஒழுங்காகப் பூத்தமலர். கலை-கலை, துகில்.
ஊர்-ஊர்பரிவேடம்.

பாங்குதலைமகளறிவுறுத்தல்

பூமகள்வாழ்ந்திடுகோடீச்சுரநம்பர்பொன்மலையெங்
கோமகணீதிநெறியெம்மனோர்க்குக்குறித்துரைக்கு

நாமகளாயினளிப்போதப்போதுறுநாமகளுங்
காமகள்வார்மலர்த்தாரண்ணலேயுட்களிப்புறவே (உசச)

குறிபெயர்த்திடுதல்.

வேதாகமம்புகல்கோடீச்சுரநம்பர்வெற்பிலங்கண்
மாதாமூன்னீயிங்குமாதிரதரங்கொண்டுவந்ததனைக்
காதாலறிந்தனள்கண்ணாலறியக்கருதுகின்றா
ஞாதாவினிவேறிடம்பார்த்துமின்னொடுநண்ணுகவே. (உசரு)

பகல்வருவானையிரவுவருகென்றல்.

பகலூடிரவழைத்திட்டோன்பரவும்பரமர்திருப்
புகலூருறைபவர்கோடீச்சுரமன்னபொன்னிடத்தில்
விகலூர்தனிற்பந்தடக்கஞ்செயலுக்கிரரச்சிறந்த
தகலூரவெல்வரிற்கண்கட்டுவித்தையறிந்தனையே. (உசசா)

இரவுவருவானைப்பகல்வருகென்றல்.

புகலோடரிக்கண்வளையரமாதர்பொருந்துநெறி
யகலோதிராவரல்கோடீச்சுரநம்பர்பொன்வெற்பி
லிகலோங்குவேலவெழிற்றேசினைநீயினிப்பகல்வா
பகலோனிரவில்வருவதின்றேயிந்தப்பாரிடத்தே. (உசஎ)

பகலினுமிரவினும்பயின்றுவருகென்றல்.

மையுறுகண்டர்தென்கோடீச்சுரமின்னின்வாயமுது
கையுறுவேலவிருபோதும்வந்துகலந்தருந்து
செய்யகதிர்மதிவாரமிராப்பகறீயதென்பர்
வெய்யபசியுடையோர்க்கொருபோதும்விலக்கிலையே. (உசஅ)

பகலினுமிரவினுமகலிவணென்றல்.

அரும்பேயலர்ந்திடுங்காய்தரும்வேங்கையடவியினீ
வரும்பேரிரவிற்பழுக்கும்பழிச்சொல்வரிற்பகலிற்
கரும்பேய்ந்திடுவயற்கோடீச்சுரநங்கருத்தர்வெற்பிற்
சுரும்பேறியதொடையாயினியானென்சொலத்தக்கதே. (உசகூ)

உரவோனாடுமூருமதலியகூறல்.

இளவெண்மதிபுனைகோடீச்சுரேசரிமையவெற்ப
தளர்மின்னிடையிடைநீவளையாதுறல்சால்பலகின்

வளர்பொன்னிகாட்டிற்குநல்லூர்க்குநின்மங்கலக்குடிக்கும்
இளர்கலஞ்சாதிக்குஞ்சாதிக்கும்வாய்மைக்குங்கீர்த்திக்குமே. (உருய)

ஆறுபார்த்துற்றவச்சங்கூறல்.

சுராசுரர்போற்றரன்கோடீச்சரவெற்பர் துன்னிரவி
லராவுறுகான்வரிலஞ்சுவரேமின்றராவெனுநீள்
கராமலையுமலையாறெளிதோசங்கராவெனுமித்
தராதலங்காக்குமன்னவுனக்கோகைதருங்கிள்ளையே. (உருக)

ஆற்றாத்தன்மையாற்றக்கூறல்.

செய்வண்டலைவுறுகோடீச்சரம்பர்தென்வரைவே
ளெய்வண்டுகொண்டுமின்கைவண்டுசோருமிருங்கட்கடல்
பெய்வண்டுளிகள்கொடுவண்பயோதரம்பெய்யமிற்கு
மொய்வண்டுறுதொடையாருமொதுவெனுமுன்னரசே. (உருஉ)

காவன்மிகவுரைத்தல்.

மின்னைநிகர்சடைக்கோடீச்சரவள்ளல்வெற்பவிங்கு
முன்னையினன்றுவரவரக்காவன்முதிர்வடைந்த
தன்னைசிறிதுமிமையாதெப்போதுமருகுறுமெம்
பொன்னைக்களவிற்கவரவொண்ணாதினிப்புத்திக்குமே. (உருங)

காமமிகவுரைத்தல்.

பொன்னகரீதிமையாரிதில்வாழ்குரர்போற்றுமத
னென்னவொளிர்மன்னநீகற்பதாருவிலகிடெங்க
ளன்னமுன்மீதுபடர்காமவல்லியணியடைந்தாள்
பன்னுமிப்போதெழிற்கோடீச்சுரேசர்பனிவரைக்கே. (உருச)

கனவுநலிவுரைத்தல்.

செய்யார்மழுவரன்கோடீச்சுரமன்னகேரிழையா
ளையாநெருநற்கனவிடைநீவந்ததுவுமவள்
கையாமலரைப்பிடித்ததுமீதுகலந்திடருள்
செய்யாதகன்றதுஞ்சொல்லிநைந்தாளிதென்சித்திரமே. (உருரு)

கவினழிவுரைத்தல்.

காரிலகுங்கண்டர்கோடீச்சுரமன்னகாரிகைமெய்
பீரிலகுற்றதகலாவெழிலும்பெரிதகன்ற

தாரிலகுஞ்சுடர்வேலோய்நிலத்திடையங்கங்குழு
மேரிலராயிடிற்சீருளராவர்கொலேழையரோ. (௨௫௬)

நிலத்திடை-அங்கங்குழும்-அங்கங்கேயுழும், அங்கத்திற்கூடும், ஏரழுகு-உழுமேர். சீர்-சிறப்பு, செல்வம். ஏழையர்-மாதர், ஏழையர்கள்.

தன்பதிக்ககற்சிதலைவன்சாற்றல்.

சீதளநீர்ச்சடைக்கோடீச்சுரநம்பர்திண்சிலம்பின்
மாதளவன்னநகையாளிடையென்மனமிருக்கத்
தாதளவும்பொழிலெம்மூர்க்ககன்றுன்றடங்கயற்கண்
காதளவோடித்திரும்புமுன்மீள்குவன்காரிகையே. (௨௫௭)

பாங்கிதலைவனைச்செலவுவிலக்கல்.

மகமேருவில்லினர்கோடீச்சுரேசர்வரையிறைவ
சுகமேநடந்திடுனக்குமுன்னுங்கடிலங்குமுன்னா
ரகமேபிறந்திடுவோமுணர்ந்தாங்கெனணங்கைப்பு
முகமேலழுந்தவெளிதின்மகிழ்ந்துமுயங்குகவே. (௨௫௮)

தலைவனீங்கல்வேண்டல்.

சித்தரொணக்கூடலில்விளையாடியசித்தர்பர
முத்தரம்பொன்மதிற்கோடீச்சுரமன்னமொய்குழலா
யத்தலமேகுங்குறையொன்றுளனீயருள்வைத்திங்கோ
ருத்தரம்போவெனிற்றக்கணம்போதுவனூரடைந்தே. (௨௫௯)

தக்கணம்போதுவன்-அர்த்தக்ஷணம்வருவேன்.

பாங்கிவிடுத்தல்.

வதனமொராந்துடைக்கோடீச்சுரேசர்வரையுறநீர்
பதமுன்பெயர்க்கும்பதந்தனிலாபிற்பதந்தனிலோ
மதன்கொடுங்கோல்கொடுசெங்கோற்கடவுள்வரும்வருமுன்
கதழ்வின்வருவீரெனிலேகலாகுமெங்காவலரே. (௨௬௰)

பாங்கிதலைவிக்குத்தலைவன்செலவுணர்த்தல்.

வணக்கொன்றைசூடரன்கோடீச்சுரமன்னவாணுதலா
டனக்கிங்குநம்பிரிவாற்றுதொருகணந்தானுமென
வெனக்குத்தெரியுந்தெரியுமெனக்கெனவென்மனந்தே
றுனக்குத்தெரியுமன்றேயென்றவ்வூர்க்கவருற்றனரே. (௨௬௧)

தலைவிநெஞ்சொடுபுலத்தல்.

நாளானவைகளிற்கோடீச்சுரேசர்நகத்திறைபொய்ச்
சூளார்மனத்தோடிறவாய்ப்பிரிந்துழித்துன்பமதி

னீளாதுகல்லாயிருக்கக்கல்லாதுகினைவழிந்து
வாளாவெனைநீவருத்தலென்னிக்குமடநெஞ்சமே. (உசுஉ)

சென்றோனீடவிற்காமமிக்ககழிபடர்கிளவி.

புலமெய்த்தவர்புகழ்கோடீச்சுரேசர்புகலியின்பாற்
குலவுப்படுகளாயேகண்டிலாய்கொலென்கொண்கனையே
நிலவுற்றிடுதிரையேயறியேன்சற்றுநித்திரையே
சலமுற்றிடுசங்கமேயுறுமோவன்பர்தஞ்சங்கமே. (உசுங)

பாங்கியிறைவியையாற்றுவித்தல்.

கிளர்புகழ்வேந்தர்வருகின்றனருன்றன்கேதமெலாந்
தளர்வுறச்செய்திடுநீதளரேன்மின்றளரிடையாய்
வளர்பிறைநாளும்வளராதிருக்கவளர்சடைமேற்
களவெம்பணியுய்த்தகோடீச்சுரவள்ளல்கார்வரைக்கே. (உசுச)

தலைவிக்கிறையோன்வந்தமையுணர்த்தல்.

பேராயிரத்தான்கோடீச்சுரவெற்பிற்பேரொழில்கொ
ளாராரயின்மன்னராராநின்னெஞ்சகத்தார்வமதைத்
தேராதவரல்லர்தேராதவன்கடற்சென்றனன்மேல்
வாராரொன்றேங்கிடல்வாராரிளமுலைவந்தனரே. (உசுரு)

பாங்கிதலைவனொடுநொந்துவினாதல்.

தன்னொடுதானுறழ்கோடீச்சுரேசன்றனதருளான்
மின்னொடுநாளும்பிழைத்திருக்கின்றனன்வேலவநீ
யென்னொடுகூறியகாலமெல்லாஞ்சென்றதெவ்விடத்தோ
வுன்னொடுகூடியிருந்ததன்றேயங்குனுன்னெஞ்சமே. (உசுசு)

தலைவன்பாங்கியொடுநொந்துவினாதல்.

கூற்றினைவாட்டியகோடீச்சுரேசர்குவட்டிளமான்
றேற்றியமாரனலருமிவ்வூரினர்தூற்றலருஞ்
சாற்றிடுதிங்கள்வந்தீயும்வெந்தீயுந்தனியிருந்திங்
காற்றியதெப்படியெப்படியாற்றுவித்தாயண்ணங்கே. (உசுஎ)

பாங்கியாற்றுவித்திருந்தமைகூறல்.

கருந்தாழ்குழலியெங்கோடீச்சுரேசர்கருந்தடத்தில்
வருந்தாமலின்றுவருந்தாமமார்பன்வருந்தலென்று
மிருந்தார்ப்பொழிற்புள்ளிருந்தாலுமுன்னூரொதிர்தெரித்தும்
பொருந்தார்ப்பொருந்தனிவேலவநிற்போற்றியும்போற்றினனே (உசுஅ)

ஈன்பொருட்பிரிவுணர்த்தேந்திழைக்கென்றல்.

நரைவிடைப்பாகர்தென்கோடீச்சுரமன்னநன்னுதலாய்
வரைவிடைவைத்துப்பொருட்கேகுவேன்மென்மனமுருகிக்
கரைவிடைநூலன்னகன்னியுற்றுஞெலென்கதழ்வனையாட்
குரைவிடைதந்திடுவந்திடுவேனிதியுன்னிடத்தே. (உசுசு)

கின்பொருட்பிரிவுணர்நீயவட்கென்றல்.

ஏடவிழ்தாமரைக்கண்ணனுங்கண்ணனுமின்னலுற்றுத்
தேடமுன்னின்றவர்கோடீச்சுரேசர்சிலம்பிறைவ
நாடக்ககசபைக்கேகியுனீநறுநுதலைக்
கூடவழைத்தேகலையேனுமேகலைக்கூறவட்கே. (உஎ0)

நீடேனென்றவனீங்கல்.

கனமுறுங்கண்டர்தென்கோடீச்சுரவெற்பிற்காரிகையென்
மனமுறுமுற்சந்தனமுறுமச்சந்தனமனுமுற்
றனமுறுமத்தந்தனமுறிலத்தந்தனவிடையா
னினமுறுமுத்தந்தனவிலைக்காமிகுமெனய்துவனே. (உஎக)

பாங்கிபொருட்பிரிவுதலைவிக்குணர்த்தல்.

இருகோடிவையென்முலைவிலைக்காகவிறைவர்முதல்
வருகோடினம்பணிகோடீச்சுரம்பர்மால்வரைபி
னருகோடியுச்சியிலாவதுமாலையிலாவதிங்கு
னொருகோடிபொன்கொண்டணைகுவன்கோடியென்றுற்றனரே. (உஎஉ)

தலைவியிரங்கல்.

மின்னனவேணியர்கோடீச்சுரேசர்வியன்சிலம்பின்
மன்னவரொன்றனைப்பித்தலையென்றுவரைந்துதனிப்
பொன்னினுக்கேகினரொன்றுயிர்வேளம்பிற்போனபின்வந்
தன்னதையார்க்களித்தாருடன்வாழ்வரிங்கன்புடனே. (உஎங)

பாங்கிகொடுஞ்சொற்சொல்லல்.

கண்டார்கலுழ்தற்குக்காரணந்தேர்ந்திடக்கண்கலக்கங்
கொண்டாயிதுவென்னகோடீச்சுரேசர்குவட்டிடைறவர்
வண்டார்குழலியெனக்கோபிறர்க்கோவரையுனக்கோ
மண்டாரழற்சுரங்கென்றூர்பொருட்குவகுத்துரையே. (உஎச)

தலைவிகொடுஞ்சொற்சொல்லல்.

பாருயிராம்புனறீவளிவானம்பரிதிமதி
யாருயிராம்பரன்கோடீச்சுரவணங்கேயெளியேற்
கோருயிரோருயிரீருயிராயதெனைப்பிரிவுற்
றோருயிர்நீயென்றிருந்தனனீயதையோர்கிலையே. (உ௭௫)

வருகுவர்மீண்டெனப்பாங்கிவலித்தல்.

மலைகண்டவில்லினர்கோடீச்சுரசித்தர்மால்வரைமேற்
கொலைகண்டவேற்கண்ணரிகான்வெயிலாற்றுயர்கூர்பிணையி
னிலைகண்டிருகியருகினின்றேதன்னிழலுதவுங்
கலைகண்டிடிற்பொருட்கேகுவரோகலைகண்டவரோ. (உ௭௬)

பருவங்கண்டுதலைவிபுலம்பல்.

சேராரொணக்கறுத்தார்த்தம்புகொண்டுசிலைவளைத்துக்
காரானதுவங்கெதிர்ந்ததன்னூர்வரக்கண்டிலன்யான்
றேரார்கொலோவிதையாங்கித்திசைதேர்திரும்பிலையோ
தாரார்கடுக்கையர்கோடீச்சுரேசர்தடங்கிரிக்கே. (உ௭௭)

இகுளைவம்பென்றல்

கயிலாயநாதர்தென்கோடீச்சுரத்துன்கருங்குழலி
னியலானதற்கஞ்சியோடியகாரிவ்விடைத்தனிநீ
பயில்வாய்ந்துசற்றுப்பயங்காட்டவந்ததுபார்த்ததையிம்
மயிலாடுகின்றதுகார்காலமன்றிதுவம்பணங்கே. (உ௭௮)

தலைவிமறுத்தல்.

நகைமுலைகாரன்றிதோமப்புகையெனிநன்கிசைத்தாய்
புகைதனைக்கண்டுமயிலாடுமோகொன்றைபூத்திடுமோ
தகைதருகோபமுறுமோவதுவிற்றரித்திடுமோ
திகையணியாடையர்கோடீச்சுரத்துத்திகைத்தனையே. (உ௭௯

அவர்தூதாகிவந்ததிப்பொழுதெனத்துணைவிகூறல்.

தங்கேரிடையன்பர்தங்கேரிடையுறத்தாமிவர்ந்து
வங்கேனுனக்குமுன்னுமின்னூர்க்கென்வரவுணர்த்து
மூங்கேகியென்றுநம்பாலவிடுத்தாரிம்முகிலனையேல்
பங்கேற்றகையுமைபங்கர்கோடீச்சுரப்பைந்தடத்தே. (உ௮௰




தலைமகளாற்றல்.

ஊரும்விடையான்கோடீச்சரமெனுமூருறையு
மோருயிரிருடற்கெல்வாறலையுமொவ்வோரணையாய்ச்
சாருமென்றாலுங்குறை நிமேயெனுஞ்சா
தேருடன்மீண்டுமுற்றாதும்பட்டாரவர்தேர்ந்தவை (௨௮௧)

அணைவட்புலப்பல்.

கூடலினழத்ததிற்கண்ணீர்சொரிந்துகுறிப்பொருநா
ணீடல்கண்டேங்கிவரிக்குறிபார்த்தின்றநெஞ்சுருகி
வாடலுற்றாங்குநந்தேர்வரனைக்கிமயங்கிடுமே
யாடல்புரிசிவன்கோடீச்சுரத்துநம்மாருயிரே. (௨௮௨)

பாகனொடுசொல்லல்.

விடையூருமத்தர்தென்கோடீச்சுரத்தர்தம்வெற்பிலிவ்வான்
கடையூருங்கொண்டல்சொரிநீருமின்னைதைக்கண்டமின்கண்
மடையூருநீரும்பெருவெள்ளமாகிவழியதனி
விடையூறதாமுன்வலவாசெலுத்திடிரதத்தையே. (௨௮௩)

மேகத்தொடுசொல்லல்.

இல்லென்றவர்க்கருள்கோடீச்சுரநம்பரோமவெற்பிற்
செல்லென்றுனையறிந்தோர்சொல்லநீமுன்னர்ச்செல்லுகின்றாய்
நில்லென்றுநான்சொலினிற்பைகொல்லோசென்றுநேர்முகிலே
வல்லென்றகொங்கைவருந்தாதுனாநான்வருந்திறனே. (௨௮௪)

பாங்கிவலம்புரிகேட்டவன்வரவறிவுறுத்தல்.

கைச்சங்கம்போயிற்றெனமெலியேலிங்ஙன்காவலர்தம்
மெய்ச்சங்கநல்கிடமேவுகின்றானெனமேன்மதுரா
யச்சங்கத்தேதமிழாய்ந்தகோடீச்சுரத்தாதிவெற்பி
லிச்சங்கம்வந்துன்களத்துறவேற்பவிசைக்கின்றதே. (௨௮௫)

தலைவிவலம்புரிவாழ்த்தல்.

தொண்டானவர்க்கருள்கோடீச்சுரநம்பர்தூய்வரைச்செல் (௨௮௬)
லொண்டார்புனையன்பர்திண்டேர்வரவெனக்கோதியெனைத்
தண்டாதலைக்குந்துயர்ச்சங்கமாற்றியசங்கமினி
வுண்டாமனைக்கண்ணர்கைச்சங்கமாகிவயங்குகவே. (௨௮௭)

பாங்கிகினைத்தமைவினுதல்.

நடத்தொழிற்றில்லைப்பொதுவிற்செய்தாண்மலர்ாளுமென்னெஞ்
சிடத்துறச்செய்பரன்கோடீச்சுரவெற்பிலின்புறநல்
வடத்திருமார்பவெப்போதெனுமாக்குன்மலரகப்பூந்
தடதெங்களன்னையனைந்ததுண்டோவுண்மைசாற்றுகவே (உஅஎ)

தலைவனினைத்தமைசெப்பல்.

எனைத்தன்னடிமையெனத்தடுத்தாண்டருளீசர்வரி
கனைத்துலவும்பொழிற்கோடீச்சுரமின்கருதுமென்னெஞ்
சினைத்தன்றனத்தொருவாகொண்டிறுக்கிமற்றிங்குவைத்தா
ளினைத்திடற்கங்கென்னசெய்வேனினைத்திலனேரிழையே. (உஅஅ)

பாங்கிதலைவியையாறுவித்திருந்தமைகூறல்.

மின்னனவேணியாகோடீச்சுரேசாதம்பெய்ம்மையரு
ளென்னனுபானத்திலும்புகழ்மாத்திரையின்னள்செவி
மன்னவுரைத்துட்கொளச்செய்துமன்னவமன்மதன்செ
யின்னலிறுவித்திருந்தனனிததிறமிங்ககோ. (உஅகூ)

தலைவன்முலைவிலைவிடுத்தமைபாங்கிதலைவிக்குணர்த்தல்.

தந்தனநேரிடைபாகாதென்கோடீச்சுரத்தடத்துத
தந்தனமெல்லையிக்கில்லாதனகின்றனவிலையாத்
தந்தனரன்பர்மற்றிந்நாளினிநீதவிர்த்திடுவி
தந்தனநீடியசொல்லாமணம்பெறுதாழ்குழலே. (உகூ௰)

தலைவிநற்றுயுள்ளமகிழ்ச்சியுள்ளல்.

வேலையன்றுதைதென்கோடீச்சுரவெற்பின்மேவுமன்னை
யாலைவில்வேளனையாருக்குநகைகயிறுலையுறு
மாலைபுனைந்திடும்போதுமன்றோர்கிளையாலையினங்
காலையங்கைப்பற்றுகாலையுமுள்ளங்களித்திடுமே. (உகூக)

பாங்கிதமர்வரைவெதிர்ந்தமைதலைவிக்குணர்த்தல்.

வேழத்துரிபுனைகோடீச்சுரேசர்விரும்புமெழிற்
சோழகன்றுட்டன்பர்முன்னோர்நல்வேலையிற்றுன்னியுய
ரீழமுமேடிகலிங்கமுமன்றறகியந்துவைப்ப
யாழனசொல்லிதந்தார்நமரோற்றனரின்புறவே. (உகூஉ)

தலைவியுவகையாற்றுதுளத்தொடுகிளத்தல்.

அனமேவுறுவயற்கோடீச்சுரநம்பரப்பொன்வெற்பின்
மனமேவருந்தவிறைவர்வந்தார்நன்மணஞ்செயவித்

தினமேயடைக்குமலர்தூற்றிடுமூர்ச்சிறுமியர்வாய்
சினமேவியமதன்றேரோடலைவன்றெருவெங்குமே. (௨௯௩)

பாங்கிதலைவனைவாழ்த்தல்.

இன்னுடையருமதுபார்த்தயருநம்மின்னலுமேன்
மன்னுதுவந்திங்கொருமாத்திரைதனின்மாற்றிறையிம்
மின்னாள்கைப்பற்றியவ்வள்ளியுஞ்சேயுமுன்மேவலெனப்
பன்னுநம்வாழ்கதென்கோடீச்சுரேசர்பணிவனைக்கே. (௨௯௪)

மணம்பொருட்டாகவணங்கைப்பராநிலைகாட்டல்.

முன்பார்சிவன்றிருக்கோடீச்சுரவெற்பமுத்தநகைப்
பொன்பாவிழையுன்மணம்பொருட்டாகப்புகழணங்கை
யன்பான்மலர்தூஉய்ப்பலியோச்சிப்போற்றியருகினின்று
தென்பாலெழுங்கோகிலமொழிகேட்குந்திறத்தினையே. (௨௯௫)

அதுகண்டோன்மகிழ்தல்.

வின்னுணரவினர்கோடீச்சுரநம்பர்வெற்பிடத்தி
வின்னுண்மணம்பெறநாம்வேண்டவேண்டுமிலங்குமிநாண்
மன்னுவல்கொண்டெதிர்நின்றலர்தூஉய்நம்மணப்பொருட்டிப்
பொன்னாரணங்கைபராவனம்மேலவர்புண்ணியமே. (௨௯௬)

கையறுதோழிகண்ணீர்துடைத்தல்.

அருங்கயிலாயத்தர்கோடீச்சுரமன்னவாயிழைநின்
னிருங்கதலிப்புறநின்றிடுகாந்தளெழின்மலரின்
மருங்குறுசெய்யகமலத்தலர்ந்தமலர்க்குவளை
கருங்குளிர்முத்தந்தருந்திறனென்னதுகட்டுரையே. (௨௯௭)

துடையாகியகதலிப்புறத்து நிற்கின்றகாந்தளாகிய கையின்மீதுற்ற தாமரையாகிய முகத்துக்கு வளையாகியகண் - முத்தம்போலநீர்த் துளிகள்.

தலைவிகலுழ்தற்காரணங்கூறல்.

தார்வார்தருசடைக்கோடீச்சுரநம்பர்தாரவெற்பைச்
சேர்வாரத்தென்றனைச்சேர்வாரமன்னர்சிறிதுநன்மை
யார்வார்தரமுன்றனக்கிழைத்தாரொன்றன்றுணைக்கண்டு
நீர்வாருமென்றிடநீர்த்தனையேவுநெடுவிழியே. (௨௯௮)

தெய்வங்காட்டித்தெளிப்பத்தெளிந்தமைகூறல்.

வெஞ்சமர்ச்சூற்படைக்கோடீச்சுரவள்ளல்வெற்பரினி
யஞ்சலுனைப்பிரியேனெனத்தேவின்முன்னுங்குறைத்தல்
வஞ்சகமென்பதறியேனிதுவலாமற்றதனை
யஞ்சனம்பார்த்தகண்ணெஞ்சிற்குமோதியழிகின்றதே. (௨௯௯)

தலைவிதலைவனிகந்தமையியம்பல்.

வேதாந்தமேவியகோடீச்சுரசித்தர்வெற்பனெனக்
காதாரமானவராதாரமென்பதகங்குறியார்
தாதார்பொழிலிடைத்தாம்புணர்ஞான்றக்குத்தாழ்ந்திருந்த
போதாகரிசொல்லப்போதாவெனநகர்ப்போயினரோ. (௩௱)

அதுகேட்டபாங்கியியற்பழித்தல்.

நல்லார்தொழுந்திருக்கோடீச்சுரத்துறைநம்பர்வெற்பின்
வல்லார்முலையந்தவல்லாளர்க்குன்றன்மனமருவு
வில்லாரழன்முன்மெழுகொத்துருகிமெலிதலுறுங்
கல்லார்மனமெனக்கல்லாயிருக்குமக்காவலர்க்கே. (௩௱௧)

தலைவியியற்படமொழிதல்.

வள்ளம்புலிபுனைகோடீச்சுரேசர்வரைத்தண்பொன்னி
வெள்ளஞ்சிலதினந்தாழினுமாங்குடன்மேவிப்பைங்கூ
ழுள்ளங்குளிர்ந்திடப்பாய்வதுபோலன்பரொண்டொடிநான்
கொள்ளஞர்நீக்கிப்புரப்பான்கருதிக்குறுகுவரோ. (௩௱௨)

தெய்வம்பொறைகொளச்செல்குவமென்றல்.

சொரிவள்ளருளரன்கோடீச்சுரவெற்பர்சூளுரைத்துப்
பிரிவண்ணினொன்றவர்பால்வெகுளேல்பிரிந்திடினும்
பரிவதெம்பாலுளர்தென்னேரகத்துப்பரம்பொருளே
விரிவடிவேலவென்றேத்துவம்வாசென்றுமெல்லியலே. (௩௱௩)

தலைவியில்வயிற்செறித்தமையியம்பல்.

விடவாளரவணிகோடீச்சுரவள்ளல்வெற்பிலிவ்வூர்
மடவார்கடூற்றுமலரையுமென்றுயர்மாலையும்பார்த்
தடல்வாள்விழிசிவந்திம்மனைநீங்கலென்றம்மனைவன்
றடவார்முலைத்தையலாய்முன்புறவெனைச்சாற்றினளே. (௩௱௪)

செவிலிகனையிருளவன்வரக்கண்டமைகூறல்.

மாலொருபாகர்தென்கோடீச்சுரந்தனைவாழ்த்திறைவர்
வேலொடுநென்னலிரவிற்குறியுற்றுமீண்டுசெலுங்
காலொருகள்வனிங்கேகலுற்றனென்றுகைந்நெரித்தாள்
பாலொடுதேனன்னசொல்லாயனைநான்பயந்தனனே. (௱௫)

ஏறிவளைவேற்றுமைக்கேதுவினவல்.

நெய்திகழ்சூலத்தர்கோடீச்சுரம்வாழ்திருத்தர்வெற்பிற்
பொய்திகழ்நேரிடையாய்புனநீத்திங்குப்போந்தபின்மின்
மெய்குழையுற்றதெனைம்பால்சரிகொண்டுமென்கைவெறி
தெய்திடக்கங்கணங்கண்கொண்டதென்னீதெனக்குரையே. (௱௬)

கூந்தல்சரிந்து-கைவளைபோய், வெறிதாக. கங்கணம-நீர்த்துளி.

பாங்கிவெறிவிலக்கல்.

தோட்டுக்குளிர்பொழிற்கோடீச்சுரத்துறைசோதிவரை
வேட்டுக்குறவர்கள்பல்லோர்முனென்னைவெகுளலன்னே
காட்டுக்குள்வாழிவ்வணங்கையுங்கேளொருகாலத்துமிவ்
வாட்டுக்கும்பாட்டுக்கும்போகாதுமங்கையருந்துயரோ. (௱௭)

வெறிவிலக்கியவழிசெவிலிவினைதல்.

காதார்குழையரன்கோடீச்சுரவள்ளல்காதலனை
வேதாவைவெஞ்சிறைவைத்தோனைநாங்கண்மிகப்பணிந்து
போதார்குழலிதுயர்தீர்க்கும்போதிங்குப்போந்தணங்கே
நீதான்றடுத்ததென்னீதாமென்றேதுநெறியிதற்கே. (௱௮)

பூத்தருபுணர்ச்சியாலறத்தொடுநிற்றல்.

நின்னடிநோக்கிப்பயமுற்றுநீடுகண்ணீருடனே
பன்னுமிப்போதங்கிருந்ததிதனைக்கண்பார்த்திடெனக்
கன்னலஞ்சொல்லிகைத்தந்தானொருவன்முன்கார்ப்புனத்தோன்
றின்னதறிகுவன்கோடீச்சுரேசரிமையத்திலே. (௱௯)

புனறருபுணர்ச்சியாலறத்தொடுநிற்றல்.

மன்றினுளாடல்செய்கோடீச்சுரநம்பர்மால்வரைப்பா
லன்றொருநாளணங்கன்னரொடும்விளையாடிடுங்கான்
மன்றற்குழலம்முனிபோலப்பொன்னிவலஞ்சுழிவாய்ச்
சென்றிடல்பார்த்துற்றெடுத்தளித்தானொருதிண்ணியனே. (௱௰)

அம்முனி-அந்தவேரண்டமுனிவன்போல.

களிறுதருபுணர்ச்சியாலறத்தொடுநிற்றல்.

அங்கைக்கனலரன்கோடீச்சுரவெற்பிலஞ்சிமுன்செல்
வெங்கைக்களிற்றொன்றுமெல்லியலாடனிமேவல்கண்டு
கொங்கைக்களிற்றொடும்போர்க்குறல்பார்த்ததிற்கூடொருவன்
செங்கைக்கதிர்வேலினொழ்ந்தலட்டாததன்னைசேயெனவே. (௱௧௧)

தலைவிமேவற்றுமைகண்டுநற்றாய்செவிலியைவினாதல்.

பொன்னகங்கோட்டரன்கோடீச்சுரமன்னபூங்கொடிமெய்
நென்னலுக்கின்றுமெலிந்ததவிர்ந்ததுநீள்பசலை
துன்னருங்கைவளைகாணேன்விழிப்புனல்சோர்வுகண்டே
னின்னளிவ்வின்னலிங்கெய்வதற்கேதெதுவின்னகையே. (௱௧௨)

செவிலிநற்றாய்க்கறத்தொடுநிற்றல்.

சினங்காலுமேற்றரன்கோடீச்சுரமன்னசேயிழையாய்
புனங்காவல்செய்திடும்போதொருநாளங்குப்போந்தெனது
மனங்காண்கிலேனதைக்காட்டுதியென்றொருமானவனின்
னனங்காமுறுநடையாண்மனங்கைக்கொண்டகன்றனனே. (௱௧௩)

நற்றாய்தமருக்கறத்தொடுநிற்றல்.

மருத்தண்கடுக்கையர்கோடீச்சுரவெற்பில்வாழ்குவிர்நம்
முருந்தனமூரன்றுதுக்குறைந்தாளினிமுன்னுமவள்
கருத்துக்கிசைந்தகருந்தற்குநல்குமின்கந்தனுக்குத்
திருத்தகுவள்ளியைமுன்னீந்துவந்ததிறமெனவே. (௱௧௪)

பாங்கிதலைவற்குடன்போக்குணர்த்தல்.

விண்மதிசூடரன்கோடீச்சுரவெற்பின்மேவரசே
வன்மதயானைபலதந்தியாயினும்வண்குறவர்
மென்மடமானையெளிதினல்காரிருள்வேலைமெள்ள
நின்மதில்சூழூர்க்குடன்கொண்டுசெல்கென்னிணைவிழுவே. (௱௧௫)

தலைவனுடன்போக்குமறுத்தல்.

ஏயுஞ்சுடர்க்கண்ணர்கோடீச்சுரமின்னிடைகடத்திற்
பேயுஞ்சுழல்கட்புலியுமுலாமதன்பேருணாத்தால்
வாயுஞ்சுடுமெண்மணமுஞ்சுடுமிகமற்றதனி
லாயுஞ்சுடர்த்தொடியன்னமுன்னெவ்வாறடிவைப்பதே. (௱௧௬)

பாங்கிபோக்குடன்படுத்தல்.

மாலையன்போற்றிடுகோடீச்சுரசித்தர்மால்வரைக்க
ணாலையனங்கனெப்பாயுன்னுடனடந்தாலனைய
பாலையிற்கள்ளியங்காடும்வெங்கானும்படர்தழலுஞ்
சோலையுந்தென்றலும்வாவியும்போலுந்துடியிடைக்கே. (௩௱௧௭)

தலைமகன்போக்குடன்படுதல்.

கருந்திருக்கண்டர்தென்கோடீச்சுரமன்னகன்னிதனிப்
பருந்துபறக்குமிழலூர்செல்லும்பருந்தழற்கான்
வருந்திறமில்லள்வருந்திடுமென்றென்மனந்தடுக்கும்
பொருந்தினனின்சொற்றடுக்காதுநான்கொடுபோவதற்கே. (௩௱௧௮)

பாங்கிதலைவிக்குடன்போக்குணர்த்தல்.

உன்னிடமேவரன்கோடீச்சுரவெற்பருங்கள்கன்னி
பன்னிடுவேளைப்பணிவதல்லாதந்தப்பாலையுறு
கன்னியைக்கண்டுபணிந்திலனோவெனக்கட்டுரைத்தார்
முன்னியதோர்ந்திலன்பின்னியநாண்மலர்மொய்குழலே. (௩௱௧௯)

தலைவிநாணழிவிரங்கல்.

கனத்தினைநேர்கண்டர்கோடீச்சுரவெற்பின்கண்ணுறுமென்
றனத்துடன்றோன்றியென்கண்மணிபோலத்தணத்தலின்றி
மனத்துணையாகியிருந்திடுநாண்முன்மதிநுதலாய்
வனத்திடைச்சென்றதுநானேகுவேனிறைவன்பின்னன்றே. ௩௱௨௰)

கற்பின்மேம்பாடுபாங்கிகூறல்.

தேனாட்டுகொன்றையர்கோடீச்சுரசித்தர்தென்சிலம்பின்
பானாட்டினைவிட்டுப்பானாட்டுமென்மொழிப்பாவையெம்மூட்
கானாட்டுங்கானுன்செலவோர்பெரிதன்றுகற்புடையோர்
வானாட்டினுஞ்செல்வரித்தேயம்விட்டுமகிழ்நர்பின்னே. (௩௱௨௧)

தலைவியொருப்பட்டெழுதல்.

வன்னெஞ்சிடத்தகல்கோடீச்சுரேசர்மணிவனாக்கண்
மின்னெஞ்சுறுமிடையாய்நீயெழுதுயர்வேலைவிட்டென்
றுன்னெஞ்சுங்காவலர்தந்நெஞ்சுங்கூடியிங்கோடிடுங்கா
லென்னெஞ்சுமாறுசொலுமோவதுவுமிசைக்கின்றதே. (௩௱௨௨)

சுரத்தியல்புரைத்துழிச்சொல்லல்.

நீங்காவலர்மழைதன்னொடுதாய்சினநீள்கடலிற்
பாங்காமுழுகியவெம்மையைப்பாலைப்படுதழற்கட்
போங்காலகற்றிநங்கோடீச்சுரேசர்புகழ்வரைக்க
ணுங்காதரவுற்றிருப்பேன்பின்னீயுமணையணங்கே. (௩௨௩)

கையடைகொடுத்தல்.

பம்பாலடியுறைகோடீச்சுரவள்ளல்பைம்பொன்வெற்ப
கொம்பாமருங்குலுக்காவியுநானுங்கொழுநனுநீ
நம்பாவருமின்னவடனைக்காத்தியிந்நாளினின்று
ளைம்பாலொருபாலுருவானபோதினுமன்புவைத்தே. (௩௨௪)

பாங்கிவைகிருள்விடுத்தல்.

சொன்றுடுபூவையையீவார்கையிந்தன்னைதுன்பகற்றி
மூன்றாழலினலர்தூற்றும்வாய்களைமூடியுங்கள்
பின்றுவடியைப்பிடியாவருவேன்பிடிநடைமூன்
கொன்றார்கணிச்சியர்கோடீச்சுரந்தனைக்கூடுகவே. (௩௨௫)

தலைவன்சுரத்துய்த்தல்.

வெண்டிருநீற்றரன்கோடீச்சுரவெற்பில்வெவ்வெயின்மூன்
வண்டுகில்சென்னியிற்சேர்நுதலார்வெயர்மாற்றிடுகான்
மண்டழற்கல்லினிடறுதுமெல்லெனவாநிழன்மேற்
கண்டிழிவைகுவங்கண்டதைப்போலுங்கனிமொழியே. (௩௨௬)

தலைமகன்பொழில்கண்டுவியத்தல்.

இருக்கோலிடும்புகழ்க்கோடீச்சுரவிறையின்னருளாற்
பெருங்கோகைமேவக்கழிப்பாலைப்பாங்கர்ப்பெருமணஞ்சார்
திருக்கோலக்காவெதிர்கண்டேமிதில்வைகிச்சென்றிடுமென்
னுருக்கோகிலமுன்னழைக்கின்றதுநமையொண்டொடியே. (௩௨௭)

அசைவறிந்திருத்தல்.

கொடியிடையேற்றரன்கோடீச்சுரநேர்கொடியிடைநின்
னடிமலர்சேர்ந்ததுமெய்யோதுவண்டதணிநுதல்வேர்
வடிதருகின்றதகன்மணற்சூடழன்மண்டியதிக்
கடிமலர்க்காவிலுறைவோந்துயரங்கடியளவே. (௩௨௮)

### உவந்தலர்சூட்டியுண்மகிழ்ந்துரைத்தல்.

சிவந்தபொன்மெய்யரன்கோடீச்சுரமன்னசேயிழைநா
ணவந்தருபாலைத்துயர்தீர்ந்திடநின்னடிபிடித்திட்
டுவந்தலர்சூட்டியவோதியைப்பார்த்தெனகணேதிடுமா
ளிவந்திடுங்கோர்பொழிற்பூத்ததுபாரொன்றென்னெஞ்சினுக்கே.

### கண்டோரயிர்த்தல். (௩௰௯)

வருவார்பரன்றிருக்கோடீச்சுரந்தனில்வாழ்பவரோ
மருவார்தருவிண்ணுலகினரோவிஞ்சைவல்லவரோ
வுருவார்மதனுமிரதியுமோவொன்றுமோர்ந்திலமால்
வெருவார்சுரத்துறவேதோநிமித்தமிம்மேலவர்க்கே. (௩௱)

### கண்டோர்காதலின்விலக்கல்.

மலைவில்லரன்றிருக்கோடீச்சுரந்தனைவாழ்த்தலர்போன்
றலைநீப்பவன்மேற்கடலாழ்ந்தனனூரருகிளரிமீண்
டிலைமற்றிவளுமெலிந்தாளிரவெம்மிலையருவிக்
கலையினுரியிற்றுயின்றெழுந்தேகையகலையிலே. (௩௱௧)

### கண்டோர்தம்பதியணிமைசாற்றல்.

குன்றிதுதன்னைக்கடந்துசென்றாலெதிர்கோபுரமு
மின்றிகழ்மெல்லிடையார்விளையாடுபொன்மேடைகளுந்
துன்றிணர்ச்சோலையுமாகிவில்வேலவதோன்றுந்தில்லை
மன்றினுளாடல்செய்கோடீசனேரண்டமாபுரமே. (௩௱௨)

### தலைவன்றன்பதியடைந்தமைசாற்றல்.

இதுதான்சிவன்றிருக்கோடீச்சுரமிதிலீதரன்றேர்
விதுவைக்குறைபடச்செய்ம்முகத்தாய்துகின்மென்கொடிநீ
டதுநம்மனையிதுவேதியராவணமாவணமீ
துதுதண்கமலத்தடமிதுகாவிரிபொன்னதியே. (௩௱௩)

### செவிலிபாங்கியைவினுதல்.

சாற்றாயெனக்குண்மையெங்கேகினாள்வஞ்சிதண்சுனைக்கோ
மேற்றாதுகுமலர்ப்பைம்பொழிற்கோவிங்குமென்கிளிகூடஉய்த்
தோற்றாகுலமுறவாரமைத்தேகினர்தாயவிடை
யேற்றார்கொடியரன்கோடீச்சுரமன்னவேந்திழையே. (௩௱௪)

### பாங்கிசெவிலிக்குணர்த்தல்.

மருதவனத்துறைகோடீச்சுரநம்பர்மால்வரையாம்
பருவண்குறிஞ்சியினெய்தலுற்றாதியிற்பாங்கினுட

னொருதண்மலர்முல்லைமாலைதந்தான்றனுடனடந்தாள்
கருதுநின்பாலைகலங்கவிழ்த்தாரிற்கலங்கலையே. (௩௩௫)

செவிலிதேற்றுவோர்க்கெதிரழிந்துமொழிதல்.

நெருங்கிதழ்க்கொன்றையர்கோடீச்சுரம்பர்நேரியினான்
மருங்குவைத்தான்மருங்கென்றுரமேற்றிவளர்த்தமயில்
சுரங்கொண்டிடமருந்தீந்தெதிர்பண்டிதஞ்சொன்னவனைக்
கருங்குழலீரிங்கறியேனெளியேன்கலங்கினனே. (௩௩௬)

செவிலிதன்னறிவின்மைதன்னைநொந்துரைத்தல்.

ஓங்கருளீசர்தென்கோடீச்சுரவெற்புறையுமலர்த்
தேங்கமழ்கோதையிரொன்சொல்லுவேன்றளிர்ச்சீறடிமுன்
வேங்கடநல்லதலங்கொலென்றுண்மிக்கமேன்மைமத்தென்றே
றாங்கவனெண்ணமுய்த்தோர்ந்திலன்சென்றுளருஞ்சுரமே. (௩௩௭)

செவிலிதெய்வவாழ்த்தல்.

அன்னோரிடற்றினர்கோடீச்சுரேசரருண்மதலாய்
தென்னோரகமன்னகன்னோரகங்கொடுசென்றவள்வந்
தென்னேரகமுறச்செய்தனையேலுன்னெதிர்சிறகவோர்
மன்னோர்மயில்விடுத்தெந்நேரமுமுனைவாழ்த்துவமே. (௩௩௮)

செவிலிநற்றாயக்கறத்தொடுநிற்றல்.

வேலைநஞ்சுண்டவர்கோடீச்சுரமன்னமெல்லியலாய்
காலையிற்சார்ந்திலைதயுச்சயிர்சூடெனக்கையிலொரு
மாலைதந்தானொருமாலையொப்பானதைவாங்கிநந்தம்
பாலையப்பாலையிடத்தாங்கவள்பின்படர்ந்தனளே. (௩௩௯)

நற்றாய்பாங்கியொடுபுலம்பல்.

புகழிற்பெரிதுறுகோடீச்சுரேசர்பொருப்பிடத்து
நிகழிங்கொருவன்றன்மாலையுற்றாளிவணீடெனவே
திகழிக்குறிப்புமுன்னியுரைத்தான்மணஞ்செய்தவற்கே
மகளியனோக்கிவிடுவேன்கெடுத்தாய்மடமகளே. (௩௪௰)

பாங்கியொடுபுலம்பல்.

தாரிருந்தார்சடைக்கோடீச்சுரேசர்தடஞ்சிலம்பின்
வாரிருந்தாரம்புனைமுலையீரந்தமன்னிருந்தெ
னாரிருந்தாலென்னிளமானடைந்தவருஞ்சுரத்தி
னூரிருந்தாலிங்கிவ்வாறலையாதென்றனெஞ்சகமே. (௩௪௧

### அயலாரொடுபுலம்பல்.

விண்பெற்றகீர்த்தியர்கோடீச்சுரநிந்தர்வெற்புறுமென்
பண்பெற்றசொல்லியெனைவிட்டுப்போற்றியபாவியைவிட்
டெண்பெற்றவன்பின்னடந்தாண்மகிழன்மினேங்கிழையீர்
பெண்பெற்றபோதேதணியாத்துயரமும்பெற்றனமே. (௩௪௨)

### பயிலிடத்தொடுபுலம்பல்.

கிளையாடகவில்லர்கோடீச்சுரேசர்கிரிதனில்வந்
திளையாடும்பொழிலேபுனமேமலரீர்ஞ்சுனையே
வளையாடுகையினளும்மொடெப்போதுவருவலென்றாள்
விளையாடத்தேடுமப்பேதையர்க்கோதவிளம்பிடுமே. (௩௪௩)

### நிமித்தம்போற்றல்.

மின்னார்சடையண்ணல்கோடீச்சுரமன்னமெல்லியலை
யுன்னுவெளியேன்கனாயாமனிகனாவுற்றுதவிற்
பொன்னார்கலந்தனிற்பாயசலூனுமென்போனகமு
மன்னுதரவொடுனக்களிப்பேன்கொம்பில்வாழ்கொடியே. (௩௪௪)

சுரம்பாலைநிலம்-பண்டிதம். முன்னவனுக்கிதம்பேசினவர்.

### சுரந்தணிவித்தல்.

மேலையுறுவெங்கதிரோயெவருக்குமித்திரனே
மாலையிடங்கொண்டகோடீச்சுரேசர்வனாதனில்விற்
கோலநிகர்தருங்கண்பலர்வஞ்சிக்கொடிபடர்ந்த
பாலையைநீடுமருதமென்றேதிடப்பண்ணுகவே. (௩௪௫)

### மென்மைத்தன்மைக்கிரங்கல்.

ஆய்ந்தார்புகழ்ந்திடுங்கோடீச்சுரேசரணிவனாமேல்
வாய்ந்தாரமுதொத்திருந்திடுபேதைமலர்மிதிக்கி
லேய்ந்தாகுலமுறுமெவ்வாறுற்றாள்கடலேழும்பொங்கிப்
பாய்ந்தாலும்வெம்மைதணியாதசெந்தழற்பாலையிலே. (௩௪௬)

### இளமைத்தன்மைக்கிரங்கல்.

சோதிமுழுமுதல்கோடீச்சுரவிளந்தோகையுன்ற
னோதிமுடிப்பவராரங்கனமெடுத்தூட்டுவரார்
தாதிமுதலோரிலரோயென்செய்திதழற்சுரத்தி
லாதிமுடியிலிவ்வாறேவெழுதினனாரணனே. (௩௪௭)

அச்சத்தன்மைக்கச்சமுற்றிரங்கல்.

சொல்லுஞ்சுநதியர்கோடீச்சுரேசர்துணைமலர்த்தா
ளல்லும்பகலுங்கருதாதவர்செல்லநஞ்சுரத்திற்
கொல்லுங்கரியுந்தழலும்வந்தையோகுறுகவெதிர்
புல்லும்பொழுதென்னென்றஞ்சுறுமோநந்தம்பொன்னுளமே. (௩சஅ)

கொல்-பொற்கொல்லன். கரிகரி- யானை. பொன்- பொன்னொத்தமகள்.

கண்டோரிரக்கம்.

செழுவான்பணிசிவன்கோடீச்சுரத்தின்றிசைகுறித்துத்
தொழுவாள்வளர்த்தவளின்றுளிப்பாவிதுடிக்குமெதி
ரழுவாள்வன்பாங்கிபுலம்புவர்தாதியராங்கயர்ந்து
விழுவார்கள்பாங்கியர்சென்றதின்றூர்கடம்மெல்லுயிரோ. (௩சகூ)

செவிலியாற்றுத்தாயைத்தேற்றல்.

பங்கேருகத்திருவன்னாள்பொருட்டுப்பருவாலுற்
றிங்கேவருந்திடல்கோடீச்சுரேசர்தமின்னருளா
லெங்கேயிருக்கினுமின்னேகொணர்வலிமைப்பொழுதி
லங்கேழணிபொற்றொடியாளொடுமற்றவனையுமே. (௩௫0)

ஆற்றிடைமுக்கோற்பகவரைவினாதல்.

பகையாறுவென்றைந்தடக்கியொண்ணான்மறைபாடிமுக்கோல்
வகையாக்கரங்கொண்டிருநெறியோர்தனிவந்தெதிர்ந்த
தகையார்முனிவிர்மூன்கோடீச்சுரேசர்தடங்கிரிவாய்த்
திகையார்தனத்தெங்கண்மாணொருத்தானபின்சென்றதுண்டே. (௩௫க)

மிக்கோரேதுக்காட்டல்.

நனையீன்றகொன்றையர்கோடீச்சுரவெற்பினையன்மின்னே
தனையீன்றவளைவிடுத்தணிவாரிடஞ்சார்ந்திடுமுத்
தனையீன்றவளில்லினியுமுற்றயிலையுன்மகளு
மனையவளொருவன்பின்சென்றாளுலகியல்பாமிதுவே. (௩௫௨)

தனையீன்றவளை-தனையீன்றசங்கம்.

நகைக்கின்றனை-அரும்புகின்றாய். கள்ளம்-வஞ்சம். அழகியதேன்

எயிற்றியொடுபுலம்பல்.

கோளாடரவணிகோடீச்சுரேசர்குவட்டின்மத
வேளாகுகவிழிபேடர்மின்னேயொன்றும்விள்ளலின்றி

வாளாவிருந்ததிப்பாராவதமென்மகளொருத்த
னீளாநிழல்வாக்கண்டனையோவிக்குகின்றனையே. (௩௫௩)

குரவொடுபுலம்பல்.

விடத்தேசமர்கண்டர்கோடீச்சுரநம்பர்வெற்புறுமென்
மடத்தேமொழியொருகாளைபின்னுமுன்னர்வந்ததுண்டோ
கடத்தேமலர்க்குரவேநகைக்கின்றனைகள்ளமூன்ற
னிடத்தேயிருக்கின்றதுமெலிந்தேன்புகலென்றனக்கே. (௩௫௪)

கவடுகண்டிரங்கல்.

கண்டேமிருவரடியுமிக்காண்டன்னகாளைபுயங்
கொண்டேநடந்தனன்போலுமுட்காகநங்கோற்றொடியைப்
பண்டேமொழிபங்கர்கோடீச்சுரசித்தர்பைம்பொன்வெற்பி
லுண்டேயிவ்வாறுசுமந்தேகிடுசிலவும்பருமே. (௩௫௫)

கலந்துடன்வருவோர்க்கண்டுகேட்டல்.

மதனுமிரதியும்போல்வருவீரொருவார்த்தைதந்தேன்
விதனங்களைந்திடுமும்மையொப்பாரொருவித்தகனு
மிதநங்கையுமிந்நெறியேயுமக்கெதிரேகினரோ
வதநமொரைந்துடைக்கோடீச்சுரேசர்வரையருகே. (௩௫௬)

அவர்புலம்பாற்றல்.

அன்னையொப்பாயெதிர்நான்கண்டகாளையுமவ்விடத்திப்
பொன்னையொப்பாள்கண்டமெல்லியலாளுமிப்போதுசென்று
தன்னையொப்பாம்புகழ்ப்பொன்னியின்பாங்கர்ச்சடாடவிவின்
மின்னையொப்பார்மகிழ்கோடீச்சுரநகர்மேவுவரோ. (௩௫௭)

செவிலிபுதல்வியைக்காணாதுகவலைகூர்தல்.

வன்னுகவில்லான்கோடீச்சுரநாதனைவாழ்த்தினர்தந்
துன்றொளிசுரத்தெங்குநுங்காண்கிலன்றோகையையென்
பொன்னுடிநம்பினளோவெனுந்தாய்க்கென்புகல்வனினி
யன்னளுயிர்தரியாடரியாதென்றனுவியுமே. (௩௫௮)

தலைவிசேண்கன்றமைசெவிலிதாய்க்குரைத்தல்.

நிலையாகியசெல்வமின்னைவருந்தியுநேரிழையைத்
தொலையாதவெஞ்சுரங்கானகஞ்சோலைகடுன்னியொவ்வோ
ரிலையாகத்தேடினன்காணேனவளந்தவேந்தனுடன்
சிலையானவெற்பினர்கோடீச்சுரநகர்சென்றிடுமே. (௩௫௯)

தலைவன்றம்மூர்சார்ந்தமைசாற்றல்.

தேன்வந்தகொன்றையர்கோடீச்சுரேசர்செழுஞ்சிலம்பின்
மான்வந்ததன்னமின்னேயுன்றன்மீதருமால்களிறு
தான்வந்தெதிருற்றதவ்விடமீங்கிதுதண்புனமே
நான்வந்துனைக்கண்டகாவின்னதன்னதுநம்பதியே. (௩௬௰)

தலைவிமுன்செல்வோர்தம்மொடுதான்வரல்பாங்கியர்க்குணர்வித்தல்.

முற்றாமுலைபங்கர்கோடீச்சுரத்தெனைமுன்னிளங்
கற்றாவெனனையும்பாங்கியர்பான்மறைகற்றறிந்த
நற்றாமரைத்தொடையிருள்ளநாண்முற்றுநன்குவிற்று
விற்றாமவேந்தலொடுநான்வரன்முன்விளம்பிடுமே. (௩௬௧)

முன்சென்றோர்பாங்கியர்க்குணர்த்தல்.

பரந்தீண்டமுன்மின்பரிகொடுத்தோமென்றுபாவையுற்ற
சுரந்தீர்ந்தன்றொடும்பால்விளையாடற்குத்துன்னினண்ணுப்
புரந்தீயுறப்புரிகோடீச்சுரேசர்புகழ்வரைமே
லரந்தீட்டுவாளன்னகண்ணணீர்முன்சிற்றிலமைத்திடுமே. (௩௬௨)

பாங்கியர்கேட்டுநற்றாய்க்குணர்த்தல்.

நொந்தாரம்போல்விழிநீர்சொரியேலொருநோவுமின்றிச்
சந்தாரிளமுலைகோடீச்சுரேசர்தமதருளால்
வந்தாளிறைவனொடுமீண்டெனச்சிலர்வந்துமொழி
தந்தாரன்னேயின்றுதான்பயந்தாயந்தத்தையலையே. (௩௬௩)

நற்றாய்தலைமகனுளங்கோள்வேலனைவினாதல்.

நாலாரணன்பணிகோடீச்சுரேசர்தந்நாட்டினுறு
வேலாவுனையொன்றுகேட்கலுற்றேன்சுரமீண்டுவருங்
கோலாகலன்மின்னையென்மனைக்கேயுறக்கூட்டிடுமோ
பாலாகியதன்மனையுய்க்குமோவெண்ணிப்பார்த்துரையே. (௩௬௪)

நற்றாய்மணனயர்வேட்கையிற்செவிலியைவினாதல்.

பொன்மலர்ச்செஞ்சடைக்கோடீச்சுரேசனைப்போற்றிறைவன்
றன்மனைப்பான்மின்னைக்கொண்டேகினுமவன்றாயொடுதா
முன்மனைப்பான்முற்சிலசடங்காற்றிமெல்லோதிதனக்
கென்மனைப்பான்மணஞ்செய்திடச்செய்கென்றியம்புவமே. (௩௬௫)

செவிலிக்கிகுளைவரைந்தமையுணர்த்தல்.

தகரத்தனிவரியாறைந்தினர்வந்துசாற்றினர்தந்
நகரத்திலேதந்தமர்சூழமன்றனவின்றனராம்

பகரத்தலைவர்நம்பொன்னுதலாட்கியல்பாங்கினொடு
மகரத்தடங்குழைக்கோடீச்சுரேசர்வரையனையே. (௩௬௬)

தகரவரி-ஆறைந்து, தூது.

வரைந்தமைசெவிலிநற்றாய்க்குணர்த்தல்.

மாதிவணீமுன்புகோடீச்சுரேசர்வரத்திற்பெற்ற
பாதிரியோதுபருதியினுப்பண்பகரிருசொல்
லாதியுமீறும்புணர்பேர்முன்னுகினளவ்வரச
னோதிடுமற்றையதானன்மணந்தங்களூரிழைத்தே. (௩௬௭)

மாதிவணீ-மாதேயிங்குநீ. பாதிரிபருதி. இவ்விரண்டினடு - திரு-இவ்வி
ரண்டினுதியுமந்தமும் புணர்ந்தபேர், பாரி, பதி.
திரு, பாரியானாள். அவன் மற்றையதாகியபதியானான்.

தலைவன்பாங்கிக்கியான்வரைந்தமைநுமர்க்கியம்பென்றல்.

கந்தணந்தாதைதென்கோடீச்சுரமன்னகன்னிமுன்பு
தந்தனண்மாலையெமக்கின்றெம்மாலையைத்தன்கழற்றிட்
டந்தணநீடுமெம்மூர்மன்றலாற்றியனையனொடு
வந்தனம்வந்தனஞ்செய்வானுமர்க்குணாவாணுதலே. (௩௬௮)

பாங்கிதானதுமுன்னேசாற்றினேனென்றல்.

மால்பற்றிடத்தினர்கோடீச்சுரவரைவாழெமர்க்குப்
பால்பற்றியநுமர்தம்முன்புநீமணப்பந்தரின்மின்
கால்பற்றியதுமென்மந்திரமோதிக்கைபற்றியதூஉம்
வேல்பற்றியவன்னமுன்னேயுரைத்தேன்மிகமகிழ்ந்தே. (௩௬௯)

நீங்குங்கிழத்திபாங்கியர்க்குத்தன்செலவுணர்த்திவிடுத்தல்.

இல்லத்தும்பாலுறநெஞ்சோதிற்றன்னதையேலுங்கற்பு
மெல்லத்தடுத்தழைத்தேகலிற்போவலென்வேந்தர்பின்னென்
றெல்லத்துடியிடைப்பாங்கியர்க்கென்செலவோதிச்சென்மின்
சொல்லத்தகையரன்கோடீச்சுரவெற்பிற்றாயவரே. (௩௭௰)

தலைவிதன்செலவீன்றாட்குணர்த்துவிடுத்தல்.

சேவையுகைப்பவர்கோடீச்சுரேசர்சிலம்பிலென்றன்
பாவையெங்கேகினளென்றழுந்தாய்க்கென்பணிவுரைத்துக்
கோவைவிரும்பியுடன்போதலுஞ்சொல்லிக்கூட்டுறுமென்
பூவையைப்போற்றச்சொன்னேனென்றுமோதுமின்பூசுரரே. (௩௭௧)

நற்றாய்க்கந்தணர்மொழிதல்.

தெள்ளம்புலிபுனைகோடீச்சுரேசர்சிலம்பிடத்து
வெள்ளம்வருமுனணைகோலிடாததுமேற்பட்டபோ
துள்ளமுருகியென்கண்டேமுன்பெண்ணையங்கோதுமொரு
வள்ளல்பின்சென்றாள்வருவாள்சின்னாளின்மனைக்கணங்கே. (௩௭௨)

தமர்பின்சேறலைத்தலைவிகண்டிரங்கல்.

ஆனவிதற்கென்னசெய்வோமிறையையருக்கனைமேற்
றானவர்சூழ்ந்திடுமாறெனப்போர்செயத்தாவிநந்தங்
கானவர்சூழ்ந்தனர்வில்லம்புவேல்வளைகைப்பிடித்து
வானவர்சூழ்ந்திடுகோடீச்சுரநம்பர்மால்வரைக்கே. (௩௭௩)

தலைவன்றலைவியைவிடுத்தல்.

தேனேற்றகோதைவனவேடரொலொருதிண்கணையில்
வானேற்றுவேனிவராவியெல்லா நுமர்வந்தனரோ
லானேற்றினர்திருக்கோடீச்சுரேசரணிவரைக்க
ணானேற்றிடாதகல்வேனீயவர்பின்னடந்தருளே. (௩௭௪)

தமர்பின்செல்பவளவன்புறநோக்கிக்கவன்றரற்றல்.

வெற்றிகொள்வேந்தர்தென்கோடீச்சுரம்வாழ்விமலர்வெற்பிற்
குற்றியன்மேவிடுகரமுன்னேருயிர்கூடுறுங்கா
லொற்றியமெய்விட்டகல்வதினம்மையிங்குய்த்தகன்றார்
பற்றியவேடர்வரனேக்கிநம்மேற்பரிவிதுவே. (௩௭௫)

வரைந்துழிக்கண்டோர்மகிழ்ந்துரைத்தல்.

அன்றியல்வள்ளிசெவ்வேண்மணநோக்கினமாங்கதன்பி
னின்றிவர்செய்ம்மணங்கண்டோமிவைமற்றிரண்டினுமே
குன்றவர்பேதையர்மன்றல்கண்டோர்விழிகொண்டதின்ப
மொன்றிருமுன்றுகட்கோடீச்சுரவள்ளலோங்கலிலே. (௩௭௬)

தலைவன்றலைவிமுன்பாங்கியைப்புகழ்தல்.

கான்செய்தகொன்றையர்கோடீச்சுரேசர்கதிர்வரைமேற்
றேன்செய்தனவித்திருவின்பநானுறச்செய்யுனக்கு
நான்செய்திடுநன்றிகாணேன்கதிர்முலைநன்னுதலாய்
வான்செய்தநன்றிக்குலகோரியற்றுங்கைம்மாறிலையே. (௩௭௭)

தலைவனைப்பாங்கிவாழ்த்தல்.

இங்கடியேற்குமுகமனென்னேமன்னவென்றனையு
மெங்குலத்தோடிந்தமின்னையும்போற்றினையின்னனொடு
திங்களங்கண்ணியர்கோடீச்சரந்தனிற்செந்திருவும்
பங்கயக்கண்ணனும்போல்வாழ்தியென்றும்பலனுறவே. (௩௭௮)

தலைவியைவரையுநாளளவும்வருந்தாதிருந்தமைவினாதல்.

இமையாதிருத்தியிமைக்கிற்பிரிவென்றிறைவர்முன்னின்
றுமையாளிடத்தினர்கோடீச்சுரேசருயர்வரைப்பா
லமையார்புயத்தாயனைகாப்பினுமீடருந்தனத்துக்
கெமையாளிவர்தம்பிரிவினுமெவ்வாறிருந்தனையே. (௩௭௯)

தலைவிவருந்தாதிருந்தமைகூறல்.

சிதம்பயில்வேந்தருள்கோடீச்சுரநகர்த்தேவர்பிரான்
பதம்பணியாரழற்கண்போலிருந்துபணிக்கதிரோன்
வதம்புரிதென்றல்பைங்கன்னல்வில்வேளினைமாற்றியெனக்
கிதம்பண்ணியவதனாற்றுயர்காண்கிலேனேந்திழையே. (௩௮௰)

பாங்கிதலைவனைவருந்தாதிருந்தமைவினாதல்.

மையமர்கண்டர்தென்கோடீச்சுரமன்னமன்னவெழிற்
செய்யுறுமிந்தமடவன்னமின்றிமுன்செஞ்சிலைவே
ளையம்புகுபொழுதெவ்வாறுநீவந்தடர்தலுறு
வெய்யவிரகப்பசிபொறுத்தாய்சொல்விளங்கிடவே. (௩௮௧)

பாங்கிசெவிலிக்கிருவரன்புமுணர்த்தல்.

வேலுறழ்கண்ணிக்குமேந்தற்குமெய்யுருவேறிவர்க
ளேலுறுமாவியுமுள்ளமுமன்புடனின்புமொன்று
மாலுறுபாகத்தர்கோடீச்சுரத்தெங்கண்மன்னுமுயிர்
போலுறுமம்மனைநோக்கிடிங்கின்னதுன்புண்ணியமே. (௩௮௨

பாங்கியில்வாழ்க்கைநன்றென்றுசெவிலிக்குணர்த்தல்.

வன்புற்றரவணிகோடீச்சுரேசர்வனாயிலுன்பெண்
மென்புத்தனம்விருந்தோர்க்கூட்டியேந்தற்கும்வேண்டியிட்டங்
கின்புற்றுப்பின்றுயில்கூர்ந்துமுன்காலையெழுந்திறைஞ்சி
யன்புற்றிடுமனைவாழ்க்கையின்மேலவளாயினளே. (௩௮௩)

செவிலிதலைவிகற்பியனற்றாய்க்குரைத்தல்.

வாலியணிற்றான்கோடீச்சுரந்தனில்வாழ்ந்திடுநம்
பாலியற்சொல்லியிறைமீதுவைத்தபரிவுமவண்
மேலியற்கற்பும்பொறையுமுன்னோர்ந்திடுமேதினியோர்
சாலியப்பெண்ணெனக்கூறுகின்றார்மலர்த்தாழ்குழலே. (௩௮௪)

செவிலிமனைவாழ்க்கைத்தன்மையுரைத்தல்.

மறியார்கரத்தரன்கோடீச்சுரத்துநம்வாணுதலாள்
வறியார்க்கிரங்கலறங்காத்தலின்சொன்மருவுறுதன்
னெறியார்பொருட்குத்தகவேயழித்தனிகழ்பிறவு
மறியாநடக்குமனைவாழ்க்கையினன்கமைந்தனளே. (௩௮௫)

செவிலிநற்றாய்க்கிருவர்காதலுமுரைத்தல்.

சந்திரசேகரர்கோடீச்சுரமன்னதையன்மின்னே
தந்திரமாகத்தன்காதலைக்கேள்வர்தமக்களித்து
முந்திரவாதவர்காதலைத்தான்கொண்டயோகத்தவ
ரொந்திரதேரொங்கமேனுமாலையிலீண்டுறுமே. (௩௮௬)

காதலன்பிரிவுழிக்கண்டோர்புலவிக்கேதுவிதாமிறைவிக்கென்றல்.

ஆடகவில்லரன்கோடீச்சுரத்திந்தவண்ணலந்த
நாடகம்பாட்டியலுட்கோளபிநயநாடிவிழைந்
தேடகப்பூங்குழல்வேசையிற்கேகிடுமீதிறைவி
யூடகமிக்கபுலவியின்காரணத்துற்றிடுமே. (௩௮௭)

தனித்துழியிறைவிதுனிக்தழுதிரங்கல்.

வினைத்துயர்தீர்த்திடுங்கோடீச்சுரநம்பர்வெற்பிலுல
கனைத்தையுமவெல்வேள்கலகத்திலிந்தவமளியிலே
யெனைத்தனிவைத்துப்பிறரிலங்காத்தறகிறைவர்சென்றார்
கனைத்துறுதென்றலுந்திங்களும்வந்துணைக்காக்குமென்றே. (௩௮௮)

ஈங்கிதுவென்னெனப்பாங்கிவினாதல்.

இரவியெழுந்துமிருளேதிமையவரிந்திரன்மால்
பரவிவணங்குதென்கோடீச்சுரவள்ளல்பைம்பொன்வெற்பிற்
குரவிவருங்குழன்மானேமகிழ்ந்துகொழுநருன்கண்
விரவியிருந்திடிற்நாளின்னலேதுவிளம்புகவே. (௩௮௯)

இறைமகன்புறத்தொழுக்கிறைமகளுணர்த்தல்.

பதுமாதனன்பணிகோடீச்சுரேசர்பனிவரைவாழ்
விதுமாமுகிசென்றுசென்றுபல்போதினும்வீழ்ந்துவரி
மதுமாந்திடுதலின்மாலாயென்னின்பமருவினவர்
பொதுமாதரின்புமுறவகன்றார்கண்ணன்போக்கறிந்தே. (௩௱௯௰)

தலைவினையப்பாங்கிகழறல்.

பணவரவம்புனைகோடீச்சுரேசர்பனிவரைப்பொன்
னணவரம்பைக்கிணையூருமன்வேசையர்க்காசைகொண்டார்
மணவரத்தாரன்பரொன்றிகழேல்குலமாதர்மின்னே
கணவரதேதமெடுத்தோதன்மாண்பன்றுகற்பினுக்கே. (௩௱௯௰௧)

செவ்வணியணிந்துசேடியைவிடுப்புழி யவ்வணியுழையர்
கண்டழுங்கிக்கூறல்.

முன்னேவறிதிலிகழ்வார்கள்வீதியிம்மொய்குழலாள்
கொன்னேபவளமுஞ்செஞ்சாந்தும்வெட்சியின்கொத்துமணிந்
தென்னேபடர்தனம்மின்னிலைகாட்டற்கிசைந்ததன்றீ
தன்னோர்மிடற்றினர்கோடீச்சுரமென்னணிநகர்க்கே. (௩௱௯௰௨)

பரத்தையர்கண்டுபழித்தல்.

மாமலர்க்கொன்றையர்கோடீச்சுரத்துறுமாதகத்திற்
பூமகளாயதவடன்னிறையும்புறத்தெவருந்
தாமறிவுற்றிடத்தானுமப்பூமகடானெனவே
காமருசெந்துகில்பூண்டனளோவிந்தக்காரிகையே. (௩௱௯௰௩)

பரத்தையருலகியனோக்கிவிடுத்தல்.

கருந்திருக்கண்டர்தென்கோடீச்சுரத்துன்மடிமனையிற்
பொருந்தியமுல்லைக்கொடிபூத்ததாகப்புகன்றனர்கள்
பெருந்திறன்மன்னவநீயேகிநோக்கிப்பெருமகிழ்வுற்
றிருந்துசின்னாள்பின்னர்வந்தருள்வாயிவணென்மனைக்கே. (௩௱௯௰௪)

தலைவன்வரவுகண்டுவந்துவாயில்கண்மொழிதல்.

ஐயாலடியுற்றுநால்வர்க்குமுப்பொருளன்பினொடு
கையாலுணர்த்தரன்கோடீச்சுரமன்னர்காரிகையின்
மெய்யார்ந்தசெவ்வணிகண்டுடன்மீண்டனர்மென்குறிப்புச்
செய்யாமுன்னேர்வோர்க்குளையாற்பயனென்னைதேமொழியே. (௩௱௯௰௫)

தலைமகன்வரவுபாங்கிதலைவிக்குணர்த்தல்.

அருளூற்றமெய்பரன்கோடீச்சுரமன்னவாயிழையா
யிருளூற்றிடவிப்படிபுறம்போனவிரவிவரிற்
றெருளூற்றுவகையுருவொவர்வேந்தர்தெருவில்வந்தார்
மருளூற்றிடாதெதிர்கொண்டேத்தியில்லம்வரவழையே. (௩௯௬)

தலைவியெதிர்கொண்டுபணிதல்.

கனம்வந்தனகண்டார்கோடீச்சுரத்துனைக்கண்டவுடன்
றனம்வந்ததென்றுகளிகூர்படந்தையர்தம்மைவிட்டு
மனம்வந்ததோவிங்கெளியேனிருக்குமனைவரவித்
தினம்வந்தனந்தருகின்றனன்கோடிதிறலரசே. (௩௯௭)

புணர்ச்சியின்மகிழ்தல்.

மாலையன்போற்றரன்கோடீச்சுரமின்வழங்கியவிவ்
வேலையினின்றிங்கொருவலைவீசிவிரவிடொரு
சேலையுட்பற்றினமோர்பணம்விற்றனஞ்செங்கையுற்ற
தாலைவில்வேட்குங்கிடையாதிவ்வேலையவனியிலே. (௩௯௮)

ஒருவலைவீசி-நீங்குதலைவிட்டு. சேலை-மீனை. பணம்-படம்போன்றவல்குல்.
விற்றனம்-ஒளியுற்றமுலை, விற்றோம்.

வெள்ளணியணிந்துவிடுத்துழித்தலைவன்வந்துபாங்கியைவேண்டல்.

எள்ளருஞ்சீரரன்கோடீச்சுரத்துணைதேவலினல்
வெள்ளணிபூண்டுவருமாதைக்கண்டிங்குமேவினன்மேற்
கள்ளவிழ்கோதைமலர்த்திருமாதைக்கலந்திடச்செ
யுள்ளளவும்மெனைவாடாதுகாத்தருளொண்ணுதலே. (௩௯௯)

தலைவிநெய்யாடியதிகுளைசாற்றல்.

பாலாழிதிங்கட்பயந்தாங்கெழின்மகப்பங்கயத்தின்
மேலாளனமாதுயிர்த்துநெய்யாடினள்விற்றிகிரி
மாலானவர்க்கருள்கோடீச்சுரேசனைவாழ்த்துமெங்கள்
கோலாகலவின்றென்னுலாவதிங்கெவன்கூறுகவே. (௪௱)

தலைவன்றன்மனத்துவகைகூர்தல்.

வேணியிலாற்றினர்கோடீச்சுரந்தனில்வீற்றிருக்கும்
வாணிகர்க்கண்ணிதன்பாலார்முலையுநெய்வார்குழலும்
பாணியிற்பாலனுமேனியினீடுபசுநரம்புங்
காணியவென்னதவஞ்செய்தனஞ்சென்றகாலத்திலே. (௪௱௧)

தலைவிக்கவன்வரல்பாங்கிசாற்றல்.

ஊற்றுமணலெனத்தன்னடிக்கென்னெஞ்சுருகிடச்செய்
கோற்றொடிபாகன்றென்கோடீச்சுரமன்னகூர்விழியாய்
பாற்றினஞ்சூழ்வடிவேலார்நரகப்படுகடலின்
றேற்றகக்காசேர்மதலையைநோக்குதற்கெய்தினரோ. (௪௱௨)

மதலை-பிள்ளை, தோணி.

தலைவியுணர்ந்துதலைவனொடுபுலத்தல்.

புரத்தையெரித்தவாகோடீச்சுரம்வாழ்புகழிறைவ
பரத்தைநம்புறறவற்கீண்டென்னகாரியம்பறறிடுமவ்
வுரத்தையுறும்பலம்போறகிடையாதிங்குறுமபயமென
கரத்தைவிடுவிடுதானையையீதென்னகைத்தவமே. (௪௱௩)

தலைவிபாணனைமறுத்தல்.

சேணையுறுபுகழ்க்கோடீசசுரேசாசிமையினடினை
வீணையிசைக்கவந்தாயிதுகேட்டிங்குபெச்சுவரா
நாணையிகழ்ந்ததனுவினுக்காமிநரம்பிசைநீ
காணையிற்சேடிவெகுளுமுனபாணகடிதகல். (௪௱௪)

நாணிழந்ததனு-நாணில்லாதமெய்யுடையவேசை. காணையில் - காணும் வேல். அதுவேல்போனறகண.

வாயின்மறுக்கப்பட்டபாணனகூறல்.

வின்மால்வரைச்சிவன்கோடீசசுரந்தனில்வீற்றிருக்கும
வன்மால்களிற்றண்ணலுன்பேருணதந்திடின்வையகத்தோர்
பொன்மாரிதூசுமணிமாரியாரப்பொழிவாபெருங
கண்மாரிபெயதனளெம்பெருமாட்டிகழுத்துமின்றே. (௪௱௫)

விறலிவாயின்மறுத்தல்.

அப்புறுவேணியாகோடீசசுரேசரசலத்திறோ
கொப்புறுவீணைகொடுபாடுபாடினிகூறுமிது
தப்புவெங்காடியுந்தேனுவின்பாலுஞ்சருக்கரையு
மூப்புறுகொனச்செல்காவலர்ககிசையுன்னிசையே. (௪௱௬)

பாங்கிவாயின்மறுத்தல்.

அகவினைதீர்த்தருள்கோடீச்சுரேசரடிபணிந்தோர்
மகவருளொன்றுங்கிரந்தவர்சூளையாமாலிற்சிக்கித்

தகவுறுமச்சேய்தவழ்ந்தது நோக்கிலர் தன்மழலைச்
சுகமொழிகேட்கிலர் சின்றூரின் றுறறதென் சொல்லணங்கே. (௪௱௭)

விருந்தொடுவந்துழித்தலைவிபொறுத்தமைகண்டுதலைவன்மகிழ்தல்.

தம்மைநிகர்பவர்கோடீச்சுரந்தனிற்றண்பிறைநேர்
செம்மைநுதற்கணேறிம்மாதுதன்மைச்சிலையினையுங்
கொம்மைமுலைவேசையர்க்காப்படாகசைகொடுமயங்கு
நம்மையுமுன்னிலைசேர்த்திட்டதுறறவிந்நல்விருந்தே. (௪௱௮)

பள்ளியிடத்தழுங்கல்.

அறங்காட்டுசொல்லரன்கோடீச்சுரமன்னவாயிழைநின்
றிறங்காட்டிகல்கொண்மஞ்ஞளாவந்தாலெதிராதேர்செலுத்தி
மறங்காட்டுவேழமுகைத்தாடல்செயயமதித்தல்விட்டுப்
புறங்காட்டுதலென்னவீரங்கொலோவிநதப்பூவகத்தே. (௪௱௯)

சீறேலென்றவள்சீறடிதொழுதல்.

கானலைநீயொன்றலையுற்றமான்வரிநகாசினியில்
வானலைவெளளம்வெதுண்டிடுமோமுன்வரலெனவே
மானலையுறநேன்பிழைபொறுததாளென்றனவநதனகோ
ஞனலைசூலத்தர்கோடீசசுரமன்னவொண்டொடியே. (௪௱௰)

இஃதெவ்வகையாகாணினன்றன்றென்றல்.

வையுறுஞ்சூலததாகோடீச்சுரததென்கண்மன்னவநீ
செய்யும்வணக்கமம்மாதாகண்டாலவனைசேரவொட்டார்
மையலண்டந்துபின்னன்னவாதம்மனைவாயினின்று
கையிலிருந்தனமுமிழந்துகலங்குவையே. (௪௧௧)

அங்கவரியாரையுமறியேனெனறல்.

தேங்கமழ்கொன்றையாகோடீச்சுரோசாசிலம்புறுதே
மாங்கனியார்ந்துசுகமாவிருந்திடுவண்கிளிபோய
வேங்கருங்கானததிடைக்காஞ்சிரங்காயமிசைநதிடுமோ
பாங்கரும்பாமுலைநானறியேனொருபாவமுமே. (௪௧௨)

காமக்கிழத்தியைக்கண்டமைபகாதல்.

வேயிருட்கண்டர்தென்கோடீச்சுரமன்னவீதியிலுன்
சேயினைப்பற்றிமுலைமேலணைத்தனளசென்றனளோ
ராயிழைபார்த்ததையோர்மாதொருத்திக்கவன்சிறிய
தாயிவளென்றனரொருமறிந்ததுன்றன்களவே. (௪௧௩)

தலைவியைப்பாங்கிதணித்தல்.

இலவினிதழ்ச்செய்யவாய்மங்கையுப்பமைந்திட்டதுபோற்
புலவியதுமிருந்தற்றுருகூட்டிடல்பொன்மலர்த்தார்
நிலவிடுவார்சடைக்கோடீச்சுரேசர்நெடுங்கிரிமேற்
பலவின்புகழ்மன்னருன்றன்பணிந்தனர்பார்த்தருளே. (சுகச)

தணியாளாகத்தலைமகனூடல்.

வாமான்கரன்கொண்டகோடீச்சுரேசர்வரையிலிவண்
மாமால்கரிமுன்னும்பூவார்சுனையினும்வந்தெனைநீ
காமாநிலமன்னவென்றதக்காலமிக்காலநெஞ்சே
நாமாரிவட்குநமக்கிவளார்விடுநட்பினையே. (சுகரு)

பாங்கிதலைவனையிகழ்தல்.

மூன்னாள்விருப்பினைப்பொன்னுடைணிந்துமுருகருந்து
மின்னார்க்கவரிடைவேறுமனமும்வெகுளியுங்கொண்
டென்னாரமுதினைச்சீறுகின்றாயுனக்கிதழகன்
றென்னாவெல்விடைக்கோடீச்சுரேசர்வெற்பேங்கரசே. (சுகசு)

ஆயிழைமைந்தனுமாற்றாமையும்வாயிலாகவரவெதிர்கோடல்.

கந்தனையீன்றவர்கோடீச்சுரத்துறுகாவலர்நீர்
மைந்தனைத்தோட்கொண்டுதந்திரமாவிங்குவந்தடைந்தீர்
நிந்தனைமாதர்மயக்கிடையென்றனரினைவுக்கு
வந்தணைவுற்றதுசிந்தனைசெய்திடின்மாவியப்பே. (சுகஎ)

புணர்ந்தவன்போயபின்பாங்கியொடுதன்மகனைப்புகழ்தல்.

மருப்பயில்கொன்றையர்கோடீச்சுரத்துமறுகினிடை
யிருப்புறுவேசையிற்கேகுறுந்தோன்றலிரதந்தனைத்
திருப்பினன்சேணின்றுநம்மனைவாயுறச்சேயிவன்றன்
விருப்புறக்கற்றவிதங்கோவலவத்தொழின்மெல்லியலே. (சுகஅ)

தலைவிதலைவனைப்புகழ்தல்.

சக்கரமாற்கருள்கோடீச்சுரேசர்தடஞ்சிலம்பர்
புக்கதிற்போகவிலைமாதரில்லிடைப்போகவிலைக்

தொக்கநம்பால்வைத்தகாதலிந்நாண்மிகத்தோன்றியது
மிக்கவர்நேசமிடையூறுறுதென்றன்மெய்யணங்கே. (௪௧௯)

பாங்கிதலைவியைப்புகழ்தல்.

திருந்திழைபாகர்தென்கோடீச்சுரேசர்செழுஞ்சிலம்பிற்
பொருந்துமிவ்வஞ்சியருள்பூத்திறையோன்புரிபிழைமிக்
கிருந்ததையெண்ணிமுன்காயாதுயபலனீந்ததரு
லருந்திறற்கற்புக்கரசியென்றோதிடுமம்புவியே. (௪௨௰)

கல்விக்குப்பிரிவுதலைவன்பாங்கிக்குணர்த்தல்.

செல்விவளர்திருக்கோடீச்சுரேசர்செழுங்கிரிமேற்
சொல்விறலுற்றவறமுதனான்குந்தொகவியற்றும்
பல்விதமானபுகழ்நல்கும்வேந்தர்பரவச்செயுங்
கல்வியழகேயழகாமெவருக்குங்காரிகையே. (௪௨௧)

கல்விப்பிரிவுபாங்கிமறுத்தல்.

நிறந்தருசூலத்தர்கோடீச்சுரர்வாழ்நிருபசென்று
சிறந்திடுகல்விகள்வேண்டுவயாவையுந்தேர்ந்துபின்ன
ரிறந்தமின்னொன்னையன்னார்களாகவியற்றுதற்கோர்
திறந்தருவிஞ்சையுங்கற்றறிகாணவுன்செல்வியையே. (௪௨௨)

தலைவனுடன்படுத்தல்.

கடமாவுரிபோர்த்தினமுகில்சூழுங்கதிர்ப்பவளத்
தடமால்வரைபுரைகோடீச்சுரேசர்தமிழ்வெற்பிலோர்
மடமானையென்றனக்கீ தாயம்மானொடுவாழ்ந்திடநான்
றிடமார்கலையிறையாயினன்றேகவின்சேயிழையே. (௪௨௩)

கல்விப்பிரிவுபாங்கிதலைவிக்குணர்த்தல்.

வெற்றிகொண்மால்விடைக்கோடீச்சுரவள்ளல்வெற்பனைய
மற்றிணிதோளுடைச்சுந்தரரானநம்மன்னவர்நூல்
பற்றிடுவோர்க்கரசாகிமெய்ஞ்ஞானசம்பந்தர்பதம்
பெற்றிடவெண்ணிப்பிரிந்தாரின்றேதப்பிறைநுதலே. (௪௨௪)

தலைவிகார்ப்பருவங்கண்டுவருந்தல்.

கல்விக்கடலைப்பருகிவந்தீண்டுக்கவிமழைதன்
சொல்வித்தக்முறைப்பெய்வதற்கேகினர்தோன்றுமுன்னிச்

செல்விற்குனித்தம்புதூற்றிடுமேலென்னசெய்குவனியான்
வல்விற்செறியிழைகோடீச்சுரேசர்வரையிடத்தே. (சஉரு)

பாங்கியாற்றுவித்தல்.

மதிபுனைவேணியர்கோடீச்சுரமன்னமாதிறைவ
ரதிர்பணித்தேர்வந்ததுவால்வளைக்கைக்கனிபணியைக்
கதிர்முலையற்றலர்கூர்ந்தவில்வேய்விற்றலைபுனைந்தி
டெதிர்சென்றழைத்திடுவோமெழுந்திதிடுங்கின்னலையே. (சஉசா)

காவற்பிரிவுதலைவனுணர்த்தவுணர்ந்ததோழிதலைவிக்குணர்த்தல்.

பொன்னலமேருவிற்கோடீச்சுரேசனைப்போற்றிடுநம்
மன்னவர்காவலனாவானுரியதன்மாதனைநீ
டின்னலுறாமற்புரப்போனென்றார்நென்னலின்றகன்றார்
கன்னலஞ்சொல்லிமண்காக்கமுன்னீதுகருதிலனே. (சஉஎ)

தலைவிகூதிர்ப்பருவங்கண்டுவருந்தல்.

ஆடைவன்றோலுடைக்கோடீச்சுரேசரசலத்துறும்
வாடையிவ்வாடையிற்றீர்ந்திடுமோவன்பர்மார்பமின்றிப்
பேடைதன்சேவல்சிறகாலணைத்தும்பெரிதயரு
மோடையுறுகார்க்குலமும்வெளிர்த்ததுடன்முற்றுமே. (சஉஅ)

தோழியாற்றுவித்தல்.

செயிர்விடைப்பாகர்தென்கோடீச்சுரேசர்செழுஞ்சிலம்பில்
வயிருடனன்பர்பொற்றேர்மணியார்க்கின்றமத்துறுமென்
றயிலொணநீதளரேல்சரற்காலத்தையுணர்ந்துன்
னுயிரினைக்காக்கவந்தார்நிலங்காத்தல்விட்டொண்ணுதலே. (சஉகூ)

தூதிற்பிரிவுதலைமகனுணர்ந்ததோழிதலைவிக்குணர்த்தல்.

பாலங்கொள்கையினர்கோடீச்சுரேசர்பரங்கிரிநம்
வேலரிரு×மன்னர்போரூரிடந்தனின்மேவியெதிர்
சாலத்தணிகைகண்டிண்டித்திருப்பதிசாருது.மென்
முலங்குடிகொண்டகண்ணணங்கேயின்றகன்றனரோ. (சஙய)

× நம்மிறைவர் போர்செய்யிடத்துச்சென்று அதைத்தணிவித்துஇவ்வூர் வருவேன்.

தலைவிமுன்பனிப்பருவங்கண்டுவருந்தல்.

முன்பனியெங்கும்புகைபோற்பரந்ததுமுன்னமனும்
வன்பனிதங்கண்மறைந்தென்றனுருயிர்வாங்கவரு
மன்பனில்காவெந்தவனொடெவ்வாறமராற்றுவல்பே
ரின்பனிராகுலங்கோடீச்சரேசனிமவனாக்கே. (ச௱கூக)

தோழியாற்றுவித்தல்.

ஆசைஞாயிறுதிங்கட்கண்ணன்செவ்வாயினனற்புதன்விண்
மிசைவாய்புகழ்த்திருக்கோடீச்சரவண்ணல்வெற்பிடத்தி
லிசைவாளையாழுஞ்சால்வெள்ளியற்கோற்றொடியிப்பொழுதுன்
னசைவாய்த்துப்பொய்வசனியாதமன்னிங்குநண்ணுறுமே. (ச௱கூஉ)

இசையுற்றயாழ்-வெள்வளை. பொய்வசனியாதமன்னன். நசை- ஆசை.

துணைவயிற்பிரிவுதலைவனுணர்ந்ததோழிதலைவிக்குணர்த்தல்.

வானார்மதிச்சடைக்கோடீச்சரேசர்வரையிடத்தி
லூனார்வடிவேலினைநிகர்வோர்வேந்துக்குதவியுறப்
போனார்வடமின்றுமுன்னைப்பார்வந்தார்துணைப்போயெனநீ
நானார்தரவருந்தவெனவோதிநறுநுதலே. (ச௱கூங)

தலைவிபின்பனிப்பருவங்கண்டுவருந்தல்.

காலனைக்கால்கொண்டுதைத்துயிர்வாட்டிக்கலங்கிடொரு
பாலனைக்காத்தவர்கோடீச்சரத்திற்பரவைவிடம்
போலனைபின்பனியாவென்றனுருயிர்போதலுறின்
மேலனைபோலும்பின்னேபழிவேந்தனைமேவிடுமே. (ச௱கூச)

துணைவயிற்பிரிவிற்றோழியாற்றுவித்தல்.

நீடல்லெனுங்கண்டர்கோடீச்சரமன்னநேரிழையோ
ராடலவற்காவடுத்துறைமேவிடரசையெண்ணிக்
கூடலைப்பார்த்துறுநெல்லையுநோக்கிக்குலவுமணம்
வாடலவற்கிறைவெற்றியங்கீந்தின்றுவந்திடுமே. (ச௱கூரு)

தலைவன்பொருட்பிரிவுபாங்கிக்குணர்த்தல்.

பொன்னேயெனுமுன்னவசமுற்றெல்லைப்புறந்தடவி
யென்னேயெனப்பின்விழித்தெழுந்தெங்குற்றதித்துணைநாள்

தொன்னேயென்றுட்கென்பொருட்பிரிவென்னெனக்கூறுவனீ
பின்னேயெதிர்புகல்கோடீச்சுரநம்பர்வெற்பிடத்தே. (சுரு௬)

பொருட்பிரிவுபாங்கிதலைவிக்குணர்த்தல்.

படுவொன்றறம்பொருளின்பெனுமூன்றனுட்பாங்கிரண்டு
நடுவொன்றுளதெனிலுண்டாமென்றேறுநிலந்தருமா
வடுவொன்றிரண்டுவகிரன்னகண்ணிமகிழ்நாசென்றார்
கடுவொன்றுகந்தார்கோடீச்சுரேசர்தண்காாவனாக்கே. (சுருஎ)

தலைவியிளவேனில்கண்டுவருந்தல்.

மென்மலர்க்கொன்றையர்கோடீச்சுரத்திளவேனில்கொண்டு
துன்மதிவெண்குடையானந்தீள்கடற்முழங்குபிப்போர்
மன்மதன்முதுவளர்கோல்விசையமருவவரு
மென்மனம்வாடுமிங்கிதறியார்பொருட்கேகினரோ. (சுருஅ)

பாங்கியாற்றுவித்தல்.

கங்கைகொள்வேணியர்கோடீச்சுரேசர்தண்காவிரிநாட்
டங்கயமுனைமுலைத்தென்குமரியணநடையா
யிங்கினிச்சிந்துநன்கோதாவரியுறையீர்ந்தொடையார்
தங்கவருகின்றனர்வேனில்கண்டுதளர்ந்திடலே. (சுரு௯)

கயமுனை-முலையானையொடுபகைக்குமுலை.

தலைவனுருவுவெளிப்பாடுகண்டுசொல்லியது.

பொன்னுறுமேனியர்கோடீச்சுரேசர்பொருப்பிலொரு
மின்னுறுகின்றதிலேபிறையும்வியன்குமிழும்
பன்னுறுவில்லுங்கணையுங்கமலப்பருமுகையு
மென்னுறுபார்வைமுன்னெங்ஙனுந்தோன்றுமிதென்வியப்பே. (சுசுய)

ஊர்வந்ததலைமகன்பாகற்குச்சொல்லியது.

மலைவளைகையினர்கோடீச்சுரம்வாழ்வலவமுன்வா
னிலைவளர்மாதவிகைத்திறங்கேட்டுளனீடதன்பி
னுலைவறுசீர்நளன்செய்கைகண்டேனின்றைக்குன்கைகண்டேன்
சிலைநுதல்பாலென்மனத்தின்முன்றேர்வரச்செய்தனையே. (சுசுக)

பாங்கிதலைவன்வரவுகண்டுமகிழ்ந்துரைத்தல்.

பின்னிற்கிளர்சடைக்கோடீச்சுரவள்ளல்வெற்புறுமின்
பொன்னிற்குப்பொன்னுமணிக்குமணியும்புரவலநீ

மன்னிற்குளெங்குநிறைதந்தாய்கொணர்ந்துமகிழ்வினினிக்
கன்னிக்குயின்மொழிதுன்னுமில்வாழ்க்கைகணந்தருமே. (௪௪௨

தலைமகளோடிருந்ததலைவன்கார்ப்பருவங்கண்டுசொல்லியது.

புறத்தாழ்மென்பூங்குழற்பொனனிடைவந்துபுணர்தலுற்றேன்
திறத்தார்மழுப்படைக்கோடீசசுரேசாசெழுமிடறு
நிறத்தாட்சிலமபுசடையருளாமெனநீயினிமெய்
கறுத்தார்தருமின்னிப்பொழிமழைநாளுங்கனமுகிலே. (௪௪௩



கோடீச்சுரக்கோவை

முற்றிற்று.

